# ராமானுஜர் கதைகள்








'சௌரி'







**மல்லிகைப் பதிப்பகம்**

தியாகராயநகர் : : சென்னை-17

## உத்தமர் பிறப்பு

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு.

தமிழகத்தில் நீதியும், நெறியும், கல்வியும், பண்பும் மேலோங்கியே இருக்கவேண்டுமென்று மன்னர்களும் மக்களும் விரும்பி வாழ்ந்து வந்த காலம் அது; சீலநெறியில் சிறந்த ஆன்றோர்கள் நல்வாழ்வுக்கு வழிகாட்டி வந்த நற்காலம் அது. சைவ-வைணவ சமயங்கள் செல்வாக்கு மிகுந்து, மக்களை நல்வழிப்படுத்தி, தமிழ் மொழியை மேலும் வளப்படுத்தி வந்த பொற்காலம் அது. தமிழ் மொழிக்குத் தனிப் பெருமை தந்த, பக்தியில் சிறந்த ஆழ்வார்களின் அழியாப் பாக்கள் நாடெங்கும் பரவி வந்த புனிதமான காலம் அது. இத்தகைய நல்ல சூழ்நிலையில்தான் உடையவர் என்று பிற்காலத்தில் சிறப்புப் பெயர் பெற்ற அருள் செல்வர் ஸ்ரீராமானுஜர் அவதரித்தார்.

சென்னைக்கும் காஞ்சிக்கும் இடையில் ஸ்ரீபெரும் பூதூர் எனும் சிற்றூர் உள்ளது. அது இன்றும் வைணவப் பெருமக்களுக் கெல்லாம் மிகப் புனித மான திருத்தலமாக விளங்கி வருகிறது. அங்குதான், பதினோராம் நூற்றாண்டின் தொடக்கத்தில்,

ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாய (வைணவ சமய) த்திற்கே தனிப் பெருமை அளித்துள்ள உத்தம ஆசாரியர் ராமாநுஜர் பிறந்தார்.

ராமாநுஜருடைய தந்தையார் பெயர் ஆசூரி கேசவாசாரியார். இவர் கல்வி கேள்விகளில் சிறந்த அந்தணர்; பண்பாலும் மேம்பட்டவர்; வேள்விகள் புரிந்து பெருமை பெற்றவர். ஸ்ரீபெரும்பூதூரில் கோவில் கொண்டுள்ள திருமாலிடம் தனி ஈடுபாடு கொண்டவர். இப் பெரியவரின் மனைவியாருக்குக் காந்திமதி என்று பெயர். இந்த அம்மையார், பெரிய திருமலை நம்பி எனும் சீரிய வைணவ அந்தணரின் மூத்த புதல்வி. நம்பிகள் அக் காலத்தில் வைணவ மதாசாரியராகத் திகழ்ந்த ஸ்ரீயாமுனாசாரியரின் பிரதான சீடர். ஸ்ரீயாமுனாசாரியரை வைணவ பக்தர்கள் யமுனைத்துறைவர், யாமுன முனிகள், ஆளவந்தார் என்றெல்லாம் சிறப்பித்து அழைத்து வந்தனர்.

ஆசூரி கேசவாசாரியாருக்கு வெகு காலம் வரையில் மகப்பேறு இல்லாமல் இருந்தது. இக் குறையைப் போக்கிக்கொள்ள, அப் பெரியவர் தம் மனைவியுடன் திருவல்லிக்கேணியில் குடியேறினர். அங்கு கோவில் கொண்டுள்ள பார்த்தசாரதிப் பெருமாளைத் தினமும் தரிசித்து வந்தார். சிறப்பானதொரு வேள்வியையும் செய்தார். நல்ல செயல்கள் என்றுமே வீணுவதில்லை.

ஓராண்டு காலம் கடந்தபின், தெய்வத்தின் திருவருளே உருவாகி வந்ததுபோல், ஓர் ஆண் மகவை காந்திமதிதேவியார் ஈன்றெடுத்தாள். பெற்றோர்கள் பேருவகை கொண்டார்கள். செல்வக்

குழந்தைக்கு ராமாநுஜன் என்று பெயர் சூட்டினுர்கள். பக்திக்கும் தொண்டுக்கும் தியாகத்திற்கும் நெறி வாழ்வுக்கும் எடுத்துக்காட்டான இலக்குமணனின் திருப்பெயர் இது. இப்பெயர் விளங்க வாழப் பிறந்தார் உடையவர்.

குழந்தை ராமாநுஜனின் முகப்பொலிவைக் கண்ட பெரியவர்கள், "இவன் பிற்காலத்தில் உலகம் போற்றும் மகானுக விளங்குவான்" என்று கூறி வந்தார்கள். தாய்வழிப் பாட்டனுரான பெரிய திருமலை நம்பி பேரக் குழந்தையைக் காண வந்தார். குழந்தையின் மங்கலச் சின்னங்களைக் கண்டு பெருமிதம் கொண்டார். வாழ்த்தி, ஆசிகள் கூறினுர். குழந்தையின் நல்வாழ்வை வேண்டிப் பெருமானிடம் இறைஞ்சினுர். பெரியவர்கள் தூயமனத்தோடு வழிபட்டு வேண்டுவதை இறைவன் நிறைவேற்றி வைப்பது திண்ணம். இதற்கு ஒரு சான்று ராமநுஜரின் மகத்தான உத்தம வாழ்க்கை.

பெரிய திருமலை நம்பிகளுக்கு இளைய மகள் மகாதேவி என்பவள்; அவள் ஸ்ரீபெரும்பூதூருக்கு அருகாமையில் உள்ள மதுரமங்கலம் எனும் ஊரில் வாழ்க்கைப் பட்டிருந்தாள். அவள் கணவரின் பெயர் கமலநயனபட்டர். ராமாநுஜன் பிறந்த சில தினங்களுக்குப்பின், மகாதேவிக்கும் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அதற்குக் கோவிந்தன் என்று பெயர் சூட்டினுர்கள்.

ராமாநுஜனும் கோவிந்தனும் ஸ்ரீ பெரும் பூதூரிலே சிறிது காலம் சேர்ந்தே வளர்ந்து வந்தனர்.

இரு குழந்தைகளுக்கும் நான்கு மாதங்கள் ஆனதும் சூரிய தரிசனம் செய்வித்தார்கள். பிறகு, வயது வளர வளர, அன்னமளித்தல், காதுகுத்தல், எழுத்தறிவித்தல், பூணூல்போடல் முதலிய நற் சடங்குகளைச் சிறப்பாக நடத்தி வைத்தார்கள்.

ராமாநுஜர் இளம் பிராயத்திலிருந்தே நினை வாற்றல் மிகுந்த மாணுக்கராக இருந்தார். ஆசிரியர் ஒரு முறை கூறியதைக் கவனமாகக் கேட்டு, உள்ளத் தில் இறுத்திக் கொள்வார். பல நல்ல இயல்புகளும் அவருக்கு இயற்கையாகவே அமைந்திருந்தன. பெரியவர்களிடம் மதிப்பும் மரியாதையும் கொண்டு பணிவோடு பழகுவார்; எளிவர்களிடம் பரிவுடன் நடந்து கொள்வார்; துன்புறுபவர்களைக் கண்டால் அவர் நெஞ்சம் தழுதழுக்கும்; உதவிக்கு முன்வரு வார்; மனிதாபிமானமே ராமநுஜரின் பரந்த மனப் பாங்கிற்கு ஆதாரம். சிறப்போ, நன்மையோ, தூய்மையோ, எவரிடம் (எந்த இனத்தவரிடம்) இருந்தாலும் சரி, அவரைப் பணிந்து போற்ற உவகையோடு முன்வருவார். மனித சமுதாயம் அற நெறியில் நிலைத்திருந்து, மேன்மையாக வாழ வேண்டும் என்கிற பேரவா ராமாநுஜருக்கு இளம் பிராயத்திலிருந்தே நிறைந்திருந்தது. அதன் ஊக்க மும் முயற்சியுமே பிற்காலத்தில் அவரை உலகம் போற்றும் உத்தம மதாசாரியராக விளங்க வைத் தன. குலமோ, கல்வியோ, தகுதியோ அவரைச் சிறிதும் செருக்கடையச் செய்ததில்லை.

ராமாநுஜர் இதே தன்மையில் வளர்ந்து மாணவர் நிலையை அடைந்தார்.

## நல்லோர் உறவு

ராமானுஜர் சிறந்த ஆசிரியர்களிடம் வடமொழியும் தமிழும் பயின்று வந்தார். அறிவுத்திறன் மிக்கவராதலால் விரைவிலேயே இரு மொழிகளிலும் புலமை பெற்ருர். ஆன்ரோர்களின் நல்லுறவில் அவருக்கு நாட்டம் உண்டு. இயல்பாகவே நல்ல பண்புகள் படிந்தவருக்கு நல்லவர்களின் சேர்க்கை மேலும் நன்மையே தந்தது.

ராமானுஜரை ஒரு முறை கண்டவர்கள் பிறகு மறக்க மாட்டார்கள். அவரது கம்பீரமான தோற்றத்தில் தெய்விகப் பொலிவும் தனிக் கவர்ச்சியும் உண்டு. பெரியவர்களுக்குக் கூட ராமானுஜரைக் கண்டதும் தனி மதிப்புணர்வு ஏற்படும். இனிய இளநகை எப்போதுமே அவருடைய திருமுகத்தில் தவழ்ந்து கொண்டிருக்கும். சந்திப்பவர்களிடம் இன்சொல் பேசுவதே அவருக்கு இயல்பு. ஒரு மகா புருஷருக்கு இருக்கக்கூடிய தனிச்சிறப்புகளெல்லாம் ராமானுஜரிடம் நிரம்பியிருந்தன.

பூவிருந்தவல்லி எனும் திருத்தலத்தில் (சென்னைக்கு அருகாமையில் உள்ள பூந்தமல்லி) காஞ்சீ பூரணர் என்ருெரு சிறந்த வைணவ பக்தர் வாழ்ந்து வந்தார். அவர் வணிகர் குலத்தவர். அவருக்குத் திருக்கச்சி நம்பிகள் என்ருெரு சிறப்புப் பெயரும் உண்டு. அவர் தெய்வ வழிபாட்டுக்கும் பக்தி ப்ரவசத்திற்கும் ஓர் எடுத்துக்காட்டாக விளங்கி வந்தார். நம்பி

கள் தினமும் காஞ்சி நகர் சென்று வரதராசப் பெருமானைத் தரிசித்துவிட்டு வருவார். அப்பெருமானிடம் நம்பிகளுக்குத் தனி ஈடுபாடு உண்டு. தெய்வ மூர்த்திக்குக் கவரி வீசி, குற்றேவல்கள் புரிந்து மகிழ்வார். தனித்திருக்கையில், பெருமானுடன் உரையாடுவார். செருக்கு, சினம் ஆகியவைகளை அறவே அகற்றிய மகான் அவர்.

ராமாநுஜர் நம்பிகளைத் தினமும் காஞ்சிக்குச் செல்லும் போதும், திரும்பிவரும் போதும் சந்திப்பது வழக்கம். அவரிடம் ராமாநுஜருக்கு அலாதி ஆதரவு. 'நம்பிகளை நம் அகத்திற்கு அழைத்து, உபசரிக்கவேண்டும். அவரோடு அளவளாவ வேண்டும். அவருடைய அன்புக்கு உரியவராக வேண்டும்' என்றெல்லாம் ஆசைப்பட்டார்.

ஒரு நாள் திருக்கச்சி நம்பிகள் காஞ்சியிலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்தார். ராமாநுஜர் நம்பிகளை வணங்கி, எதிர்கொண்டு வரவேற்ருர். தம் அகத்திற்கு அழைத்து வந்து அமுது செய்வித்தார். பிறகு நம்பிகள் இளைப்பாறிக் கொண்டிருந்தார். அப்போது அவரது பாதங்களை ராமானுஜர் மிருதுவாகப் பிடித்துவிட்டார். உறக்க அயர்வில் நம்பிகள் முதலில் கவனிக்கவில்லை. உறக்கம் தெளிந்ததும் அதிர்ந்துபோனுர். வேதமோதும் சீரிய அந்தண குமாரர் தம் கால்களை வருடிப் பிடித்து விடுவது தகாத செயல் என்றே எண்ணினுர்.

"சுவாமி, இது மகாஅபசாரம். நீங்கள் இப்படிச் செய்யலாகாது; நான் தாழ்ந்தவன்" என்று கூறி

ராமாநுஜரின் கைகளைப் பற்றிக் கொண்டார் திருக்கச்சி நம்பிகள்.

''நீங்கள் தெய்வ அருள் பெற்ற பரம பக்தர்; நன்னெறி சீலர். தவசிகளுக்குத் தேவையான உயர் குணங்கள் உங்களிடம் நிறைந்திருக்கின்றன. இத்தகையவர்கள் எக்குலத்தவராக இருந்தாலும் போற்றத் தகுந்தவர்கள். என் எளிய பணிவிடையை உவந்து ஏற்றுக்கொள்ளுங்கள். இதனுல் எனக்குப் பெருமையே ஏற்படும்'' என்ருர் ராமாநுஜர்.

திருக்கச்சி நம்பிகள் ராமாநுஜரின் பரந்த உள்ளத்தைக் கண்டு பரவசமடைந்தார். அவரை ஆரத் தழுவிக் கொண்டார்; பிறகு சொன்னுர்: ''ஐயா! நீங்கள் மகா புருஷராக விளங்கப் பிறந்தவர். சமூகமும், பக்தி நெறியும், தெய்வ வழிபாடும் உங்களால் தான் மேன்மையடையப் போகின்றன. உலகம் போற்றும் உத்தமராக நீங்கள் விளங்கப் போகிறீர்கள்.''

''நம்பிகளின் இந்த ஆசியும் ஆதரவுமே என்னைப் பெருமைப் படுத்தும்'' என்று கூறி வணங்கினுர் ராமாநுஜர்.

அன்று முதல் ராமாநுஜரும் திருக்கச்சி நம்பிகளும் உற்ற நண்பர்களானுர்கள். இந்த நட்பாலேயே ராமாநுஜருக்குப் பல பெரியவர்களின் தொடர்பு ஏற்பட்டது.

அப்போது ராமாநுஜரின் வயது பதினெஎன்று.

ராமாநுஜரின் பெற்ருேர்கள் தம் திருமகனுக்கு விவாகம் செய்துவைக்க விரும்பினுர்கள். நல்ல குடியில் பிறந்த ஓர் அழகிய பெண்ணை ராமா

நுஜருக்குக் கல்யாணம் செய்வித்தார்கள். திரு மணம் ஐந்து நாட்க்ள் வரையில் விமரிசையாக நடந்தது. ராமாநுஜரின் மனேவிக்குத் தஞ்சமாம்பாள் என்று பெயர். புதுமணத் தம்பதிகளின் இணேந்த இனிய வாழ்க்கை ஆனந்தமாக அமையக் கேட்பா னேன்?

சில மாதங்கள் கழிந்தன.

ராமாநுஜரின் தந்தை ஆசூரி கேசவாசாரியார் நோய் வாய்ப்பட்டார். அதே கிடக்கையில் அவருக்குப் பரகதி (மரணம்) கிடைத்து விட்டது. ராமாநுஜர் திக்கற்ற அநாதைபோல் மனமொடிந்து போனுர். காலமும், அநுபவமும், நல்லோர் ஆதரவு மாகச் சேர்ந்து ராமாநுஜரைத்தேற்றி, சுயநிலேக்குக் கொணர்ந்தன.

வாழ்வின் பயனே உயரிய இலட்சியங்களே மேற் கொள்வதும், அவைகளே நிறைவேற்றுவதும்தான் என்பதை ராமாநுஜர் நினேவு கொண்டார். அவர் அந்த அறவழியில் முனேந்து முன்னேற முற்பட் டார்.

## கல்விப் பயிற்சி

அக்காலத்தில், காஞ்சிபுரத்திற்கு அருகில் யாத வப்பிரகாசர் என்ஞெரு பேரறிஞர் இருந்தார். அவர் துறவி; வட மொழி சாத்திரங்களில் கரை கண்டவர்; வேதாந்த வித்தையில் தலேசிறந்தவர். அவரிடம் பல சீடர்கள் கல்வி பயின்ருர்கள்.

ராமாநுஜரும் அவருடைய சின்னம்மாவின் புதல்வன் கோவிந்தனும் யாதவப்பிரகாசரிடம் மாணுக்கர்களாகச் சேர்ந்தார்கள். ராமாநுஜரின் மொழிப்புலமையையும் அறிவுத் திறனேயும் கண்டு யாதவப்பிரகாசர் வியந்தார். இருவருக்கும் வேதாந்த வித்தை போதித்து வந்தார்.

அக்காலத்தில் மாணுக்கர்கள் ஆசிரியர்களுக்கு வேண்டிய தொண்டுகளே மனமுவந்து செய்வார்கள். அவ்வாறு செய்வதை மாணவர்கள் பெருமையாகக் கருதி வந்தார்கள். ஆசிரியர்களும் மாணுக்கர்களிடம் தம் புதல்வர்களேப்போல் பரிவுடன் பழகி, கல்வி கற்பிப்பார்கள். செல்வமோ செல்வாக்கோ எவ்விதச் சலுகையையும் ஏற்படுத்த முடியாது. மாணவர்கள் விரும்பி அளிக்கும் பொருள்களேயே குருதட்சிணே யாக ஆசிரியர்கள் ஏற்பார்கள்.

யாதவப்பிரகாசர் தத்துவ போதனேயில் தேர்ந்தவர். பரம்பொருளே உருவமற்ற, எல்லேயற்ற நிலேயில் வியாபித்திருப்பதாக நம்புபவர். தெய்வமூர்த்திகளே ஆராதனே புரிந்து பக்தி செலுத்தும் பண்பாட்டை அவர் ஏற்காதவர். தெய்வமூர்த்திகள் வெறும் திருவிழாச் சாதனங்கள் என்பதே அவரது கருத்து.

ஆனுல், ராமநுஜரோ அப்படிப்பட்டவரில்லே. யாதவப்பிரகாசரிடம் உள்ள வேதாந்த வித்தையைக் கற்க விரும்பினுரேயொழிய, ஆசிரியருடைய தெய்வம் தொழாக் கொள்கையை ஒப்புக்கொள்ள வில்லே. இத்தகைய கருத்து வேறுபாட்டினுல், அடிக்கடி யாதவப்பிரகாசருக்கும் ராமாநுஜருக்கும்

சச்சரவு ஏற்படலாயிற்று; ஆசிரியர் மனத்தாங்கல் கொண்டார்.

ஒருநாள் ராமாநுஜர் யாதவப்பிரகாசருக்கு எண்ணெய் தேய்த்துவிட்டுக் கொண்டிருந்தார். குருவிற்குச் செய்யும் பணிவிடை தெய்வத்திற்குச் செய்ததற்கு ஒப்பாகும் என்பது அக்காலத்து மாணவர்களின் நம்பிக்கை. அப்போது யாதவப்பிரகாசர், திருமாலைப் பற்றிய ஒரு மூதுரைக்கு இழிவாகப் பொருள் கூறினர். ராமாநுஜர் திருமால் வழிபாட்டையே பிறவிப் பயனுகக் கொண்டவர். எளிய மக்களும் நல்வழிப்பட்டு, பண்பு மாருத நல்வாழ்வு வாழ தெய்வ வழிபாடும், சமயப் பாதுகாப்பும் அறநெறி முறைகளுமே உறுதுணைகள் என்பதில் திட நம்பிக்கை உள்ளவர் ராமாநுஜர்.

ஆசிரியரின் இளக்காரமான விளக்கத்தைக் கேட்டதும் ராமாநுஜர் மனம் பதறினர். ஆசிரியரை அவமதித்து ஏதும் சொல்லலாகாது. ஆகையால் துக்கத்தைச் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டார். கண்கள் கலங்கின. கண்ணீர் வழிந்து சில சொட்டுகள் யாதவப்பிரகாசரின் தொடையில் விழுந்தன. துன்பத்தின் வெப்பம் அந்தக் கண்ணீரில் புலப்பட்டது. யாதவப்பிரகாசர் பதற்றத்துடன், "ராமாநுஜா! ஏன் கண்ணீர் விடுகிருய்?" என்ருர்.

"எங்கள் குல தெய்வமான நாரணனை நீங்கள் இழிவுபடுத்திப் பேசிவிட்டீர்கள். என் நெஞ்சம் பொறுக்கவில்லை. அதன் விளைவுதான் இந்தக் கண்ணீர்"—பணிவோடு பதில் சொன்னர்.

''என் கருத்துடன் உடன்பாடு கொள்ளாதவன் எனக்கு மாணவனாக இருக்கத் தேவையில்லை'' என்று யாதவப்பிரகாசர் கடிந்துகொண்டார்.

இப்படியே பல சந்தர்ப்பங்களில் இருவருக்கும் மனத்தாங்கல் வளர்ந்தது. ஒரு சமயம் ராமா நுஜரைக் கொல்லக்கூட யாதவப்பிரகாசர் திட்ட மிட்டார். இச்சதியைத் தம் சிற்றன்னையின் மைந்தன் கோவிந்தன் வாயிலாக அறிந்தார் ராமாநுஜர். உடனே ஆசிரியரை விட்டுப் பிரிந்து விட்டார். படித்த பெரியவர்களிடம் இத்தகைய பொறாமை, சினம், கொடுமை முதலிய தகாத இயல்புகள் இருப் பதைக் கண்டு வருந்தினார். உலக அநுபவம் பெறவும், தம்மை மேலும் தூய்மைப் படுத்திக் கொள்ளவும் தெய்வமாகவே ஏற்படுத்திய ஒரு வாய்ப்பு இது என்று எண்ணிச் சமாதானம் கொண்டார்.

யாதவப்பிரகாசரிடம் கற்றுணர்ந்த தத்துவ ஞானம் ராமாநுஜரின் சிந்தனைச் செழிப்பையும் தருக்கவாதத்திறனையும் நன்கு வளர்த்திருந்தது. மதாசாரியராக விளங்க வந்தவருக்கு, அமைய வேண்டிய தகுதிகள் அவரிடம் நிரம்பத் தொடங்கின.

ராமாநுஜர் யாதவப்பிரகாசரின் குருகுலத் திலிருந்து வந்துவிட்ட செய்தி அறிந்த திருக்கச்சி நம்பிகள், ராமாநுஜரைச் சந்திக்க வந்தார். ராமா நுஜர் பெருமிதத்துடன் நம்பிகளை எதிர்கொண்டு வரவேற்றார். அவரைத் தண்டனிட்டு வணங்கி, ''இந்த அடியவனைத் தாங்கள் சீடனாக ஏற்றுக் கொள்ள வேண்டுகிறேன். வரதராசப் பெருமானின் பேரருள் பெற்ற மகான் நீங்கள். தங்களைப் போன்ற

சத்குருவைப் பெறும் பேறு எவர்க்கும் எளிதில் கிட்டாது. இந்த எளியவனுக்கு அருள் புரியுங்கள்'' என்று வேண்டிக் கொண்டார்.

இளம்பிராயத்து அந்தண குமாரரின் உள்ளப் பண்பைக் கண்டு நம்பிகள் பெருமிதம் கொண்டார். ராமாநுஜரை ஆதரவுடன் அணைத்துக் கொண்டார். அவர் சொன்னார்:

''குழந்தாய்! நான் தாழ்ந்த குலத்தவன். மெய்ஞான அறிவை முறையாகப் பயிலாதவன். சாத்திர நூல்களில் முறையாகப் பயிற்சி இல்லாதவன். விஷ்ணுபக்தி ஒன்றையே தகுதியாகக் கொண்டவன். கல்வி, குலம், பண்பு, சீலம் ஆகியவைகளில் மேம்பட்ட நீ எனக்கு ஆசானாக இருப்பதே பொருத்தமானது'' என்றார் திருக்கச்சிநம்பிகள்.

''சுவாமி, கல்வியின் குறிக்கோளை முழுமையாகப் பெற்றவர் நீங்கள். 'நாராயணனே பரம்பொருள்; திருவுடன் கூடிய எம்பெருமானை வழிபடுவதுதான் மனிதப் பிறவியின் முதல் பயன். கல்வியின் பயனான பண்புடைமையும் பக்தியும் அடக்கமும் தெளிந்த அறிவும் எவரிடம் இருந்தாலும் சரி, அவரைப் போற்றிப் பணிவதுதான் பண்பாடு, சம்பிரதாய முறை. சினம், செருக்குகளை ஒழித்துப் பணிவோடு வாழ்வதே வாழ்வு. தெய்வத்திற்கும் சமுதாயத்திற்கும் தொண்டு புரிவதே வாழ்வின் குறிக்கோள்.' — இவைகளைத் தம் வாழ்விலேயே நடத்திக் காட்டிவரும் மகான் நீங்கள். உங்களைவிடச் சிறந்த ஞான குரு வேறு எங்கு கிடைப்பார்?'' என்று

கூறி, நம்பிகளின் பாதங்களில் சென்னி சாய்த்து வணங்கினுர் ராமாநுஜர்.

பக்தியில் சிறந்த அந்தப் பெரியவர், ராமாநுஜரை வாரி எடுத்து, அணைத்து, "எம் இளையாழ்வாரே!...." என்று அழைத்தார். ராமாநுஜரின் வைணவப் பண்பைக் கண்டு பரவசத்தோடு, அவ்விதம் சிறப்புப் பெயரிட்டு அழைத்தார் நம்பிகள்.

"இளையாழ்வாரே! உம்மை, எம் தெய்வம் வரதராஜப் பெருமானுக்கே சீடராக ஆக்குகிறேன். நாளை முதல் கோயிலுக்கு சாலைக் கிணற்றிலிருந்து தினமும் ஒரு குடம் நீர் கொணர்ந்து கொடும். பெருமானுக்குப் புரியும் இத் தொண்டு மூலம் உமது மதிநலன் மேம்படும்; புகழ் ஓங்கும்; உமது இலட்சியங்கள் சிறப்பாக நிறைவேறும்."

ராமாநுஜர் சென்னி சாய்த்து அத்திருத் தொண்டை ஏற்றுக்கொண்டார். வைணவர்களிடையே இளையாழ்வாரின் புகழ் பரவத் தொடங்கியது.

## ஸ்ரீ ஆளவந்தார் அருள்

ராமாநுஜர் காலத்தில் வைணவ மதத்தின் தனிப் பெரும் ஆசாரியராக விளங்கியிருந்தவர் ஸ்ரீ ஆளவந்தார். இவரது இயற்பெயர் யமுனைத்துறைவர். தமிழ் -சம்ஸ்கிருதம் ஆகிய இரு மொழிகளிலும் மிகுந்த

புலமை கொண்டவர். வைணவத்தையும், அதற்கு அணிகலன்களான ஆழ்வார்களின் பக்திப் பாடல் களையும் நாடெங்கும் பரப்பியவர். பிரபல வைணவ மதாசாரியரான நாதமுனி அவர்களின் பிள்ளை வழிப் பேரர்.

நாதமுனிகள்தான் முதல் முதலில் ஆழ்வார் களுடைய பக்திப் பாக்களைத் திராவிட வேதம் என்று பெருமைப்படுத்தி, வைணவ சமயத்தின் தனி மறை யாக ஏற்கச் செய்தார். அவர்தான் ஆழ்வார்களு டைய பாசுரங்களை யெல்லாம் 'திவ்யப் பிரபந்தம்' என்ற பெயரில் தொகுத்து, வைணவத் திருப்பதி களில் ஓதிவர வகை செய்தவர். அந்த மகானுடைய வழித் தோன்றலான ஆசாரியர் ஆளவந்தாரும் அதே இலட்சியத்தை வளர்த்து வந்தார். தமக்குப் பிறகு, வைணவத்தை உலகோர் போற்றும்படி சிறப்பாகப் பரப்ப ராமாநுஜரை மதாசாரியாராகத் தேர்ந்தெடுத்த பெருமையும் யமுனைத் துறை வருக்கே உரியது. இவருக்கு ஆளவந்தார் என்ற பெயர் ஏற்பட்டதே ஒரு சுவையான கதை.

ஆடி மாதம் உத்திராடம் நன்னாளில் யமுனைத் துறைவர் பிறந்தார். இவருடைய தகப்பனாரின் பெயர் ஈசுவர முனி. யமுனைத் துறைவர் அருள் பிறவி; இளம் பிராயத்திலிருந்தே அறிவுத் திறன் மிகுந்தவர். அவருக்கு ஒரு முறை சொல்லிக் கொடுத் தால் போதும், மனத்துள் பதிந்து விடும். வேதம் ஓதிய காலத்தில், "நேற்றைக்குச் சொல்லித் தந்த வேதப் பகுதியையே இன்றும் திரும்ப சொல்லித்

தருகிறீர்களே! புதியதாகத் தொடங்குங்களேன்,'' என்று குருவிடம் கேட்டாராம்.

மகாபாஷ்ய பட்டர் எனும் பிரபல வித்துவானிடம் யமுனைத்துறைவர் சாத்திர நூல்கள் பயின்று வந்தார். சீடரின் மேதா விலாசத்தைக் கண்டு ஆசிரியர் வியந்து பாராட்டாத நாளே இல்லை.

அப்பகுதியை ஆண்டு வந்த குறுநில மன்னரின் அவையில் ஆக்கியாழ்வான் எனும் மகாவித்துவான் ஒருவர் இருந்தார். அவர் எல்லா வித்துவான்களையும் வாதில் வென்று, ஒப்பற்றவர் என்று புகழ் பெற விரும்பினார். அக்கம் - பக்கத்து நாடு-நகரம்-ஊர்களிலெல்லாம் உள்ள சாத்திர விற்பன்னர்களை வாதுக்கு அழைத்து வந்தார். அவருக்கு வெற்றியே கிடைத்துவந்தது. அந்த முறையில் மகாபாஷ்ய பட்டருக்கும் அழைப்பு வந்தது. அவர் பயந்தேபோனார். வாதில் நான் தோற்பது திண்ணம். உள்ள புகழும் போய்விடும். கௌரவமாக எப்படி வாழ்வது?' என்று கவலை கொண்டார்.

ஆசிரியரின் வாட்டத்தையும், அதன் காரணத்தையும் அறிந்தார் யமுனைத் துறைவர். தாமே ஆசிரியரின் சார்பில் அரசவைக்குப்போய் வருவதாக விண்ணப்பித்தார். ஆசிரியர் அரை மனத்துடன் அநுமதித்தார்.

யமுனைத் துறைவர், ''ஆஸ்தான பண்டிதருக்கு உரிய மரியாதைகளுடன் என்னை அழைத்துச் செல்வதானால், நான் வாதுக்கு வருகிறேன்,'' என்று பதில் அனுப்பினார். அரசர் அவ்விதமே பல்லக்கும்

பரிவாரங்களும் அனுப்பி யமுனைத்துறைவரை அழைத்து வரச்செய்தார்.

அரசவையில் யமுனைத் துறைவர் நுழைந்ததுமே அவரது முகப்பொலிவைக் கண்டு, அரசி "இவர் தான் வாதில் வெல்வார்" என்று மொழிந்தாள். அரசர், "இவர் வெல்லமாட்டார். அப்படி வென்றால் என் ஆட்சிப் பகுதியில் பாதியை இவருக்குக் கொடுத்து விடுகிறேன்" என்று சூளுரைத்தார். 'இந்த இளம் வித்துவான் நிச்சயம் தோற்றுத்தான் போவான்' என்கிற நம்பிக்கை அரசருக்கு.

பல வித்துவான்களின் முன்னிலையில், ஆக்கியாழ்வானுக்கும் யமுனைத் துறைவருக்கும் சாஸ்திர சர்ச்சை நடைபெற்றது. ஆக்கியாழ்வானின் நுணுக்கமான கேள்விகளுக்கெல்லாம் யமுனைத் துறைவர் சரியாகப் பதில் சொல்லி வந்தார். எந்த விதத்திலும் யமுனைத் துறைவரை வெல்ல முடியவில்லை. பிறகு யமுனைத்துறைவர் கேள்வி கேட்கும் சந்தர்ப்பம் வந்தது.

"நான் உங்களைப்போல் சாஸ்திரங்களில் புகுந்து கேள்வி கேட்கப் போவதில்லை. பொது விஷயங்களாகக் கேட்கிறேன்" என்றார்.

"எது வேண்டுமானாலும் கேள். நீ கூறுவதை நான் தவறு என்று மறுத்துக் காட்டுகிறேன்," என்று வீராப்புப் பேசினார் ஆக்கியாழ்வான்.

யமுனைத் துறைவர் புன்முறுவலுடன், "நான் மூன்று செய்திகளைச் சொல்லுகிறேன். அவைகளை மறுத்துக்கூற முடியுமா?" என்றார்.

"நிச்சயம்."

''சரி; ஒன்று, உங்களது தாய் மலடியில்லை, இரண்டு, நம் அரசர் மேன்மை உள்ளவர்; மூன்று நம் அரசியார் உத்தமியான கற்புடை மங்கை; எங்கே, இம் மூன்று செய்திகளையும் மறுத்துச் சொல்லுங்கள், பார்ப்போம்'' என்றார் யமுனைத் துறைவர்.

ஆக்கியாழ்வான் வாயடைத்து நின்றுவிட்டார். இப்படி சாதுரியமாகக் கேள்வி கேட்டுத் தம்மைத் தோற்கடித்து விடுவார், என்று அவர் எதிர்பார்க்கவில்லை. தம் தாயை எப்படி மலடி என்று நிரூபிப்பது? அரசரை மேன்மை யில்லாதவர் என்றும், அரசியைக் கற்பில்லாதவள் என்றும் எப்படிக் கூற முடியும்? தோல்வியை ஒப்புக்கொண்டு விட்டார் ஆக்கியாழ்வான்.

சபையோர்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தார்கள். அரசி, பெரு மகிழ்வோடு ஆளவந்தாரை அணைத்து உச்சி மோந்து, ''என்னை ஆளவந்த மகான்! எனக்குப் பெருமை தேடித்தந்த மேதை!'' என்று கொண்டாடினாள். அன்று முதல் யமுனைத் துறைவரை ஆளவந்தார் என்றே மக்கள் சிறப்பித்து அழைக்கலானார்கள்.

அரசர் தாம் கொடுத்த வாக்குப்படி, பாதி இராஜ்யத்தைப் பகிர்ந்தளிக்க முன்வந்தார். ஆளவந்தார் அரச பதவியை ஏற்க மறுத்து விட்டார். ஆனால் அரசியின் உருக்கமான வேண்டுகோளுக்கு இணங்கி, அரண்மனையிலேயே தங்கியிருந்தார். அரண்மனை வைபவத்தில் தம்மையும் மறந்து ஒன்றி

விட்டார் ஆளவந்தார். வைணவர்களுக்கு ஏமாற்றம் ஏற்பட்டது.

வைணவ சமயத்தின் திருத் தொண்டர்கள் ஒன்றுகூடி, எப்படி ஆளவந்தாரை அரண்மனையிலிருந்து அழைத்து வருவது என்று யோசனை செய்தார்கள். அப்போது வைணவ மதாசாரியராக விளங்கிய மணக்கால் நம்பிகள், அப்பொறுப்பைத் தாமே ஏற்றுக் கொண்டார். தமக்குப் பின், ஆசாரிய பதவியை ஆளவந்தார்தான் ஏற்கவேண்டும் என்பது நம்பிகளின் விருப்பம். அவர் எளிய அந்தணர் வேஷத்தில் அரண்மனை மடைப்பள்ளிக்குச் சென்றார். அங்குள்ள தலைமைப் பரிசாரகரிடம், ஒரு கட்டு தூதுளங்கீரையைக் கொடுத்து, "இதை ஆளவந்தாருக்குப் பக்குவப்படுத்திப் பரிமாறுங்கள். அவருக்கு மிகவும் உகப்பாயிருக்கும்" என்றார். பரிசாரகரும் அப்படியே செய்து வந்தார். நம்பிகள் தினமும் கீரைக் கட்டு கொணர்ந்து, ஆளவந்தாருக்காகக் கொடுத்து வந்தார். ஆறு மாதங்கள் கடந்தன.

ஒரு நாள் கீரை கொடுப்பதை நம்பிகள் நிறுத்தி விட்டார். அன்று தூதுளங் கீரை இல்லாமல் ஆளவந்தாருக்குச் சாப்பாடு ருசிக்கவில்லை. "ஏன் இன்றைக்குக் கீரை பரிமாறவில்லை?" என்று கேட்டார்.

பரிசாரகர், "தினமும் ஒரு வயோதிக அந்தணர் உங்களுக்கென்று சொல்லி, கீரைக் கட்டைக் கொடுத்துவிட்டுப் போவார். இன்றைக்கு ஏனோ அவர் வரவில்லை" என்றார்.

"இந்தத் தடவை அவர் வந்தால், என்னிடம் அழைத்து வாருங்கள்" என்றார் ஆளவந்தார்.

ஒரு வாரம் கழித்து, மணக்கால் நம்பிகள் கீரை யுடன் வந்து சேர்ந்தார். பரிசாரகர் அவரை ஆள வந்தாரிடம் அழைத்துச் சென்றார். மணக்கால் நம்பிகளைக் கண்டதும், ஆளவந்தார் திகைப்புடன் அவரைத் தண்டனிட்டு வணங்கி வரவேற்றார். "சுவாமி! நீங்களா தினமும் இந்த அடியவனுக்குத் தூதுளங் கீரை கொடுத்து வந்தீர்கள்? அபசாரம்! என்னை மன்னித்தருள வேண்டும்" என்று இறைஞ் சினார். நிறையப் பொற்காசுகளைக் காணிக்கையா கக் கொணர்ந்து வைத்தார்.

"எனக்கு இந்த அழியும் செல்வம் வேண்டாம். நம் முன்னோர்கள் தேடிவைத்திருக்கும் அழியாச் செல்வம் நிறைந்து கிடக்கிறது. அதைப் பாதுகாத் துப் பிறருக்குப் பயன் படுத்த, தகுந்த பாதுகாவலர் வேண்டும். உங்கள் திருப்பாட்டனார் ஆசார்ய நாதமுனிகளின் பதவியை நீங்கள் ஏற்று, வைணவ மதத்தையும் ஆழ்வார்களின் திவ்ய பிரபந்தத்தையும் பரப்பவேண்டும். தார்மிகக் கடமையை நிறைவேற்ற, உடனே புறப்பட்டு வாருங்கள்" என்று உருக்கமாக வேண்டிக் கொண்டார்.

ஆளவந்தார் அன்றைக்கே மணக்கால்நம்பி களுடன் புறப்பட்டு திருவரங்கம் வந்து சேர்ந்தார். பிறகு, ஆளவந்தார் தகுந்த வைணவ ஆசிரியர்களி டம் மத தத்துவங்களையும், சம்பிரதாய நூல்களை யும் முறையாகப் பயின்றார். சிலகாலம் கழித்து, திருவரங்கத்திலேயே மணக்கால்நம்பிகளுக்குப் பிறகு, மதாசாரியராகப் பட்டம் பெற்றார். பல பிரபல வித்துவான்களைச் சீடர்களாக்கிக் கொண்டு,

தமிழகத்தின் பல பகுதிகளிலும் வைணவத்தை நன்கு வளரச் செய்தார். வடமொழியில் ஸ்ரீ சதுஸ் லோகீ, ஸ்தோத்ர ரத்னம் எனும் இரு துதி நூல்களையும், ஸித்தித்ரயம், ஆகமப் பிரமாணம் என்னும் சம்பிரதாய நூல் களையும் இயற்றி அழியாப் புகழ் பெற்றார் ஆளவந் தார்.

ஆளவந்தாரின் பெருமையை ஓங்கச் செய்த சிறந்த சீடர்களில் ஐவர் 'அந்தரங்க சிஷ்யர்' களென்று புகழ் பெற்றவர்கள். அவர்கள்: திருக் கச்சி நம்பிகள், பெரிய நம்பிகள், திருக்கோட்டியூர் நம்பிகள், மாலாதரர், திருவரங்கர் என்பவர்கள்.

அவர்களில் முதல்வரான திருக்கச்சி நம்பிகளைத் தான் ராமாநுஜர் தர்மகுருவாக ஏற்று, அவர் ஆணைப்படி காஞ்சியில் வரதராஜப் பெருமானுக் குத் திருத்தொண்டு புரிந்து வந்தார்.

ராமாநுஜரின் புகழ் ஆளவந்தாருக்கும் எட்டி யிருந்தது. ஒரு சமயம், ஆளவந்தார் காஞ்சிமா நக ருக்கு வந்திருந்தார் அப்போது ராமாநுஜர் யாத வப்பிரகாசரிடம் சீடராக இருந்து வந்தார். கோவில் பிராகாரத்தில் சீடர்கள்புடைசூழ, யாவதப் பிரகாசர் ராமாநுஜரின் தோளில் கை வைத்தவாறு, ஓய்யாரமாக நடந்து வந்தார். ராமாநுஜரின் பொன்னிறமான கம்பீர மேனியும், பொலிவுள்ள முகமும், ஒளிபடைத்த கண்களும் எவரையும் வசப் படுத்த வல்லவை. அப்போது எதிரே வந்த ஆளவந் தார் ராமாநுஜரைக் கண்டார். 'நமக்குப் பிறகு வைணவ சமயத்திற்குத் தலைமை தாங்கி, அதை வளப்படுத்த இந்த வாலிபர்தான் சாலவும் சிறந்த

வர்' என்று எண்ணினர். மானசீகமாகவே, ராமா நுஜரைத் தம் சீடராகவும் பிரதிநிதியாகவும் ஏற்று, அவர்பால் அருள் கொண்டார். பேரன்புடன் ராமாநுஜரை நோக்கி ஆறுதல் பெற்றார்; ஆசிகள் கூறி வாழ்த்தினர். ராமாநுஜருக்கு இதைவிடப் பெருமை வேறு என்ன இருக்க முடியும்?

ஆளவந்தாரைப் புகழுருவிலேயே அறிந்து போற்றி வந்த ராமாநுஜருக்கு, அவர் அறியாம லேயே ஆளவந்தாரின் அருள் கிடைத்துவிட்டது!

## இலட்சியப் பிரதிக்கினை

ஆளவந்தார் வயோதிகம் காரணமாக அடிக்கடி உடல் நலமற்று நோவுபட்டு வந்தார். அந்த ஏலாத நிலையிலும் வைணவ சமயத்தின் சிறப்பை சீடர்களுக்கும் பொதுமக்களுக்கும் விளக்கிக் கூறு வார். அவர் அடிக்கடி வலியுறுத்தும் உபதேசம் இது:

"பக்தர்களுக்குப் பணியாற்றுவது பகவானுக்கு ஆராதனை புரிவதுக்கு ஒப்பானது. பக்தர்களிடம் சாதி வேற்றுமை பாராட்டக்கூடாது. பக்தர்கள் கண்கண்ட தெய்வம் போன்றவர்கள். தீண்டப் படாத குலத்தில் பிறந்தவராக இருந்தாலும் திருப் பாணாழ்வாரை உயர் குலத்து வைணவர்களும் வணங்கிப் போற்ற வேண்டும். வைணவக் கோயில் களிலெல்லாம், உற்சவ மூர்த்திகளுக்கு அடிக்கடி

உற்சவங்களை விமரிசையாக நிகழ்த்தி, பக்தர்களை ஒன்று கூட்டவேண்டும்; அவர்கள் மனம் பக்தி பரவசமாக, அன்பும் நட்பும் வளர அதுவே நல்ல வாய்ப்பு. ஆழ்வார்களின் பாசுரங்களைப் புனிதமான வேத மந்திரங்களாகக் கருத வேண்டும்; தினமும் அவைகளை ஓதி வருதலே வைணவர்கள் செய்ய வேண்டிய முக்கிய கடமை. நாம் எம்பெருமானின் அடிமைகள்; அவருக்குப் பணிபுரிவதே நமது பிறவிப் பயன். மதாசாரியரைத் தெய்வமாகக் கருதி, அவர் ஆணைகளைச் சிரமேற் கொண்டு, நிறைவேற்றி வரவேண்டும். நம் முன்னோர்கள் வழிவந்த சம்பிரதாயத்திற்கு முழு ஆதரவும் தரவேண்டும். உயிரினங்கள் பகவானின் அம்சங்கள் என்ற உணர்வு கொண்டு, பரிவும் பண்பும் குறையாமல் வாழ்ந்து வரவேண்டும்.''

ஆளவந்தார் சுகவீனமுற்றார். சிஷ்யர்களுக்குக் கவலை மேலிட்டது. அவருக்குப் பிறகு மதாசாரியராக எவர் பதவி ஏற்பது என்கிற கவலை பக்தர்களுக்கு ஏற்பட்டது. அப்போது ஆளவந்தார், தம் அந்தரங்க சீடர்களில் ஒருவரான பெரிய நம்பிகளை அழைத்து, ''நீங்கள் விரைவாகக் காஞ்சிபுரம் செல்லுங்கள். அங்கு பேரருளாளன் (வரதராஜப் பெருமான்) சன்னிதியில் குற்றேவல் புரிந்து வரும் திருக்கச்சி நம்பிகளைச் சந்தியுங்கள். அவரிடம் ஈடுபட்டிருக்கும் இளையாழ்வாரை (ராமாநுஜரை) இங்கு அழைத்து வாருங்கள். இரு வைணவ சிரேட்டர்களிடமும் நம் ஆதுரத்தைத் தெரிவியுங்கள்'' என்று கூறி, அனுப்பி வைத்தார்.

பெரிய நம்பிகள் நான்கு நாட்கள் வழி நடந்து காஞ்சியை அடைந்தார். திருக்கச்சி நம்பிகளைச் சந்தித்தார். தாம் வந்த காரியத்தைத் தெரிவித்தார். பிறகு, ராமாநுஜர் கிணற்று நீர் கொணரும் வழியில் நின்று கொண்டு, ஆளவந்தார் இயற்றிய சில ஸ்தோத்திரங்களை உருக்கமாகப் பாடினார். ராமாநுஜர் இயல்பாகவே ரசனையும் பக்தி பரவசமும், மொழியழகில் ஈடுபாடும் உள்ளவர். ஆளவந்தாரின் மதுரமான துதிசுலோகங்கள் ராமாநுஜரைக் கவர்ந்ததில் வியப்பில்லை. ராமாநுஜர் மேனி சிலிர்க்க, "இவ்வளவு அற்புதமான ஸ்தோத்திரத்தை இயற்றிய மகான் யார்? நான் அப் பெரியவரைத் தரிசிக்க வேண்டும்; அவரது திருவடிகளில் அடிபணிந்து அருள் பெற வேண்டும்" என்று விண்ணப்பித்தார்.

பெரிய நம்பிகளின் மகிழ்ச்சிக்குக் கேட்கவா வேண்டும்? முயற்சி திருவினையாகியதைக் கண்டு அகம் மகிழ்ந்தார். "சுவாமி! இவை நம் மதாசாரியர் ஆளவந்தார் அவர்கள் இயற்றித் தந்தவை. அவர் திருவரங்கத்தில் எழுந்தருளியிருக்கிறார். உங்களிடம் பேரன்பு கொண்டவர். உடல் நலமில்லாமல் இருக்கிறார். உங்களைக் காண விரும்புகிறார். இன்றைக்கே புறப்பட இயலுமா?" என்றார் பெரிய நம்பிகள்.

பெருமிதம் பொங்க, "இன்றைக்கே என்ன? இப்போதே புறப்படுகிறேன். என் ஞானாசிரியர் திருக்கச்சி நம்பிகளிடம் விடை பெற்றுக் கொண்டு கிளம்புவோம், வாருங்கள். விரைவில் சென்று ஆளவந்தாரைத் தரிசிக்க வேண்டும். என் மனம் ஏனோ நிலைகொள்ளாமல் தவிக்கிறது. என்பால் அருள்



பாலித்துள்ள அந்த மகானே அடியேனுக்குத் தஞ்சம். அவருடைய திருப்பாதங்களில் பணிந்து உபதேசம் பெறவேண்டியது நம் பிறவிப்பயன்'' என்றூர் ராமாநுஜர்.

இருவரும் கோயிலுக்குச் சென்று, திருக்கச்சி நம்பிகளிடம் விடை பெற்றுக் கொண்டு, ஸ்ரீரங்கம் நோக்கிப் புறப்பட்டார்கள். விரைந்து சென்றூர்கள்.

ஆடிமாதம் உத்திராட நன்னுள்.

பெரிய நம்பிகளும் ராமாநுஜரும் அயர்வு-சோர் வைப் பாராட்டாமல் நான்கு நாட்களும் தொடர்ந்து பயணம் செய்து, திருவரங்கத்தின் எல்லையை அடைந்தார்கள். அவர்களுடைய உள்ளக் களிப்புக்கு எல்லையே இல்லை. ஆனுல், இது நீர்க்குமிழி போன்றது என்பதை அவர்கள் எப்படி உணர முடியும்? காவேரிக் கரையை அடைந்தபோது, எதிரே பெரும் கூட்டம் வருவதைக் கண்டார்கள். கூட்டத் தாரின் முகங்கள் வாடி இருந்தன. பெரிய நம்பிகளைப் பார்த்ததும், சில வைணவப் பெரியவர்கள் கதறி அழுதார்கள். பதைப்புடன், ''ஏன்? என்ன நடந்தது?'' என்று ராமாநுஜர் விசாரித்தார்.

''நம் பெருமதிப்புக்கு உரிய மதாசாரியர் ஸ்ரீஆளவந்தார் பரமபதம் அடைந்தார்'' என்றூர் கள்.

பெரிய நம்பிகள் கதறி அழுதார். ராமாநுஜர் கண்ணீர் பொங்க, அப்படியே மூர்ச்சித்து விழுந்து விட்டார். ''இவ்வளவு பாவியா நான்? இப்படி யொரு துர்ப்பாக்கியம் எனக்கு ஏற்படவேண்டுமா?''

என்கிற ஆதங்கம் இருவரையும் நிலை குலைய வைத்தது.

பெரிய நம்பிகள் சற்று மனம் தேறி, ராமாநுஜருக்கு ஆறுதல் சொன்னார்: "இளையாழ்வாரே! எம்பெருமானின் திருவுள்ளம் இப்படி நடக்க வேண்டுமென்று தீர்மானித்திருக்கிறது. நம் செயல் என்ன இருக்கிறது? ஆசாரியர் ஆளவந்தாரின் அருள் உங்களுக்கு உண்டு. இனி அவருடைய விருப்பங்களையும் உபதேசங்களையும் ஒட்டி நாம் பணி புரிய வேண்டும். இதுதான் நாம் அவருக்குப் புரியும் நன்றிக் கடன். எழுந்திருங்கள்; ஆசாரியரின் உடல் அடக்கத்திற்கு வேண்டிய காரியங்களைக் கவனிப்போம்."

இரு பெரியவர்களும் ஆளவந்தாரின் சடலம் கிடத்தியிருந்த இடத்திற்குச் சென்றார்கள். ஆழ்ந்த உறக்கத்தில் அயர்ந்திருப்பவர் போல், சாந்தி தவழ, புனிதம் புலப்பட, ஆளவந்தாரின் மேனி இருந்தது. ராமாநுஜர் தம் அருள் ஞானக்குருவைத் தண்டனிட்டு வணங்கினார். உற்று நோக்கி, உள்ளத்தில் அந்த மேனியை இறுத்திக் கொண்டார். சிறிது ஆறுதல் ஏற்பட்டது. அப்போது ஆளவந்தாரின் வலது கையில் மூன்று விரல்கள் மட்டும், மடிந்திருப்பதைக் கண்டார்.

"இப்படி மூன்று விரல்கள் மட்டும் நிமிராமல் இருக்கக் காரணம்?" என்று வினவினார் ராமாநுஜர்.

ஆளவந்தாரின் அந்தரங்க சீடர்களில் சிலர், "சுவாமிக்கு சில காலமாக மூன்று காரியங்களை நிறைவேற்றவேண்டும் என்று அவா. அவை நிறைவேறா

மல் போனதால், மூன்று மனக் குறைகளுடன் பரம கதி அடைந்திருக்கிருர். அவைகளைக் குறிப்பிடவே மூன்று விரல்கள் மடிந்திருக்கின்றன.'' என்ருர்கள்.

"அவை என்ன குறைகள்? எம்பெருமான் திருவுள்ளமும், இந்த ஆசாரியரின் திருவருளும் அடியேனுக்குத் துணை நிற்குமாளுல், சுவாமியின் மனக் குறைகளைப் போக்க முற்படுவேன்; இது திண்ணம்!'' என்று வாக்களித்தார் ராமாநுஜர்.

மூன்று விரல்களின் மடிப்பும் லேசாக விரியத் தொடங்கின. சீடர்களின் பேச்சிலிருந்து மூன்று காரணங்களையும் புரிந்து கொண்டார் ராமாநுஜர். உடனே மூன்று சுலோகங்களை இயற்றிக் கூறி, அக் குறைகளைத் தாம் நிறை செய்வதாக வாக்குக் கொடுத்தார்.

*1.* நான் 'விஷ்ணுவே பரம் பொருளான சர்வேசுவரன்' எனும் வைணவ மதத்தில் நிலைத்து நின்று, அஞ்ஞானத்தில் உழலும் மானிடர்களைத் திருத்தி நல்வழிப் படுத்துவேன். அவர்களுக்குத் தமிழ் வேதமான திவ்யப்பிரபந்தத்தைக் கற்பித்து, திருவுடன் கூடிய நாரணனின் திருத் தொண்டிலே எக் காலமும் ஈடுபடச் செய்வேன், நெறியும் பண்பும் பிறழாமல் மனிதர்கள் வாழ அறப்பணி செய்து வருவேன். ஆழ்வார்களுள் நம்மாழ்வாருக்கு ஏற்றமளிக்க வகை செய்வேன்.

2. வியாசர் இயற்றிய பிரும்மசூத்ரங்களுக்கு வைணவச் சார்புள்ளதாக விளக்கவுரை எழுதி வைப்பேன். இந்த வைணவக் கொள்கையான விசிஷ்டாத்வைதம் அந்த உரையின் மூலம் சிறப்

படைந்து பரவப் பணி புரிவேன். அந்த உரையை ஸ்ரீபாஷ்யம் என்ற பெயரில் நாராயணனுக்கே உரிய தாகச் சமர்ப்பணம் செய்வேன்.

3. வியாசர், அவர் தந்தை பராசரர் ஆகிய மகான்களிடம் பக்தி சிரத்தையை வைணவர் களிடையே வளர்ப்பேன். பராசரர் இயற்றிய அரிய புராண நூலான விஷ்ணு புராணத்தைச் செப்பமாக வெளியிட்டு, வைணவ தத்துவத்தைப் பரப்ப, பராசரர் என்கிற பெயரிலேயே மேதாவி யான ஒரு வைணவ மகாவித்துவானை உருவாக்கு வேன்.

இவைகளைக் கூறியதும், ஆளவந்தாரின் மூடி மடிந்திருந்த மூன்று விரல்களும் பிரிந்து நிமிர்ந்தன. கண்டவர்கள் பிரமித்தார்கள்; பக்திபரவசம் கொண் டார்கள். ராமாநுஜரைப் போற்றினார்கள். "தர்மா சாரியருக்கு ஏற்ற பிரதிநிதி கிடைத்து விட்டார். இனி ராமாநுஜர்தான் நம் வைணவ சமயத்திற்குத் தலைமை தாங்கும் ஆசாரியர். அவரே நமக்கு வழி காட்டும் மகான். ஆளவந்தாரின் திருவுள்ளமும் இது தான். இதன் குறிப்பையே இப்போது கண்டோம்" என்று பேசிக் கொண்டார்கள்.

முறைப்படி ஆளவந்தாரின் உடலைப் பள்ளிப் படுத்தி விட்டு (அடக்கம் செய்துவிட்டு) எல்லோரும் வீடு திரும்பினார்கள்.

ராமாநுஜரை சில தினங்களாவது திருவரங்கத் தில் தங்கியிருக்குமாறு பெரியவர்கள் கோரினார்கள். ஆனால் அவரோ காஞ்சிக்குப் புறப்பட்டு விட்டார்.

அரங்கநாதப் பெருமாளைக்கூட அவர் தரிசிக்க வில்லை.

''என் பேராவலை நிறைவேற்றி வைக்காமல் கைக்கு எட்டியதை கண்ணுக்கு எட்டாமல் வஞ்சித்து விட்ட இத் திருவரங்கனை நான் இப்போது தரிசிக்கப் போவதில்லை,'' என்று மனக் குறையுடன் கூறிவிட்டு, காஞ்சிக்குச் சென்று விட்டார் ராமாநுஜர்.

## திருமந்திர தீட்சை

ராமாநுஜரின் இயல்பில் முதிய அனுபவம் ஏற்பட லாயிற்று. பெரும் பொறுப்பை ஏற்க வேண்டிய வருக்கு வேண்டிய கம்பீரமான தன்மையும் சேர்ந்தது. இல்லறக் கவர்ச்சியில் சிக்காமல், திருக்கச்சிநம்பி களின் பக்கலிலேயே அதிக நேரம் கழிக்கலானார். நம்பிகள் ஆளவந்தாரின் முக்கிய சீடர்களில் ஒருவர். ஆளவந்தாரிடம் பல அரிய தத்துவங்களை உபதேசம் பெற்றிருந்தார். அவைகளையெல்லாம் ராமாநுஜ ருக்கு நம்பிகள் போதித்து வந்தார். ஆளவந்தாரின் வரலாற்றை அடிக்கடி கூறச்சொல்லி, கேட்டு மகிழ்ந் தார் ராமாநுஜர்; மேலும், ஆளவந்தாரைத் தம் ஞானசிரியராக வரித்து, உள்ளத்துள் அவரைப் பூஜித்து வந்தார். மனம் தூய்மை பெற்றது. வாழ்வுத் தளைகளில் ஈடுபாடு குறைந்தது. துறவிக் குத் தேவையான மனப்பக்குவத்தை அடைந்து வந்தார்.

இந்த நிலையில், ராமாநுஜரின் தாய் கால மானர். பாசத்தின் உயிர் வடிவான அந்த அம்மணி யின் மறைவு ராமாநுஜரை அனுதைபோல் ஆக்கி விட்டது. 'நாராயணனே தஞ்சம்' எனும் மனப் பண்பு இதன் பிறகு மேலும் திடமாகியது. வீட்டுப் பொறுப்பு முழுவதையும் தம் மனைவி தஞ்சமாம் பாளிடம் ஒப்படைத்துவிட்டு, திருமால் வழிபாட் டிலும், திருக்கச்சி நம்பிகளின் கூட்டுறவிலும், வேத சாத்திர நூல்களின் ஆழ்ந்த பயிற்சியிலுமே முழு நேரமும் ஈடுபடலானர்.

ஒரு நாள், ராமாநுஜர் திருக்கச்சி நம்பிகளின் திருவடிகளில் விழுந்து வணங்கி, "எனக்குத் தத்துவ போதம் ஏற்பட, நீங்கள்தான் அருள் புரியவேண் டும். என்னைச் சீடனுக ஏற்றுக்கொள்ளுங்கள்" என்று வேண்டினர்.

"இளையாழ்வாரே! நான் தாழ்ந்த குலத்தவன்; 'சாத்தாத' (தாதர்) இனத்தில் பிறந்த நான் உங் களைப்போன்ற அற மறைகள் அறிந்த அந்தணருக்கு ஆசிரியராகத் தகுதி யற்றவன். பெருமானின் திரு வருளால் உங்களுக்கு மேன்மை தரவல்ல, உத்தம ரான போதகாசிரியர் ஒருவர் வந்து சேருவார். ஆளவந்தாருக்காக நீங்கள் செய்த இலட்சியப் பிர திக்ஞைகளை மட்டும் மறந்துவிடாதீர்கள். அவை களை நிறைவேற்ற முனையுங்கள்" என்று சமா தானம் கூறி, அவர் வேண்டுகோளைக் கைவிடச் செய்தார். இருந்தாலும் ராமாநுஜருக்கு, நம்பி களிடம் தனி பக்தி. அதற்குக் கௌரவம் அளிப்பதற் காக, இந்த மகான் புசித்து விட்டு மீதம் வைக்கும்

உணவை உண்டு நான் புனிதம் பெறுவேன்,' என்று மனத்துள் தீர்மானித்துக் கொண்டார்.

மறுநாள், மனைவியிடம் நம்பிகளுக்காக நல்ல விருந்து செய்து வைக்குமாறு கூறினார். திருக்கச்சி நம்பிகளை அழைத்துவரப் புறப்பட்டார். முதல் தினமே வேண்டிக் கொண்டிருந்ததால், நம்பிகள் உரிய நேரத்தில் தாமே ராமானுஜரின் இல்லத்திற்கு வந்து சேர்ந்தார்.

ராமானுஜரின் மனைவி தஞ்சமாம்பாள், நம்பிகளை வரவேற்று உபசரித்து விருந்து படைத்தாள். அவர் உண்டு எழுந்ததும், விடைபெற்றுச் சென்று விட்டார். அவரே தாம் புசித்த இலையை எடுத்தெறிந்துவிட்டு, இடத்தையும் சாணமிட்டுத் துலக்கி விட்டார். மீதி உணவு வகைகளைப் பிச்சைக்காரர்களுக்குப் பகிர்ந்தளித்துவிட்டு, மறுமுறையும் நீராடச் சென்று விட்டாள் தஞ்சமாம்பாள்.

நம்பிகளுக்காக வெகு நேரம் காத்திருந்த ராமானுஜர், அவர் தாமே சென்று விருந்துண்டு திரும்பியதை அறிந்தார். உடனே விரைந்து வீட்டிற்கு வந்தார். அவருக்குப் பெரும் ஏமாற்றமாகி விட்டது.

"பக்தியில் சிறந்த அந்த மகானின் பிரசாதமாக, அவர் உண்டு எஞ்சிய உணவைப் புசிக்க விரும்பினேன். என்னைக் கேட்காமல் நீ ஏன் இப்படியெல்லாம் செய்தாய்?" என்று மனைவியைக் கடிந்து கொண்டார் ராமானுஜர்.

தஞ்சமாம்பாள் குலகர்வம் கொண்டவள். கணவரின் இந்த விருப்பத்தையே அவள் குறை கூறினாள்.

''நீங்கள் இதை முன்பே என்னிடம் சொல்ல வில்லையே? சொல்லியிருந்தால், விருந்தே செய் திருக்க மாட்டேன். குலத்தில் தாழ்ந்த அவரை இங்கு உணவு கொள்ளச் செய்ததே நம் பெருந்தன் மையைக் காட்டுகிறது. இதற்குமேல் நீங்கள் விரும் புவது முறையற்றது'' என்று துடுக்காகப் பதில் சொல்லி விட்டாள்.

மனமுடைந்த ராமாநுஜர், வெளியே சென்று விட்டார். அன்று முழுவதும் அவர் உண்ணவில்லை. ஒரு மரத்தடியில் அமர்ந்து கண்ணீர் வடித்தார். மனைவியிடமிருந்த பரிவு குறைந்தது; இல்வாழ்க்கை யிலே பிடிமானம் தளர்ந்தது. துறவறத்தில் நாட் டம் கொள்ளலானார். திருக்கச்சி நம்பிகளைக் காண வும் அவர் கூசினார்; காணமலும் அவரால் இருக்க முடியவில்லை. ராமாநுஜரின் தவிப்பை அறிந்த நம்பிகள், திருப்பதிக்குச் சென்று, ஆறு மாதங்கள் தங்கிவிட்டுத் திரும்பினார்.

காலம்தான் எல்லாத் துன்பங்களையும் மறக்கச் செய்து விடுமே!

ஒரு நாள் விடிகாலையில், பிச்சைக்காரனொரு வன் பசியால் வாடி, தள்ளாடிக்கொண்டே ராமா நுஜரின் அகத்திற்கு வந்தான். அவன் நிலையைக் கண்டதும் ராமாநுஜரின் உள்ளத்தில் இரக்கம் மேலிட்டது. உடனே, மனைவியை அழைத்து, ''இந்த எளியவன் மூன்று நாட்களாகப் பட்டினி. இவனுக்கு உள்ளே இருக்கும் உணவைப் பரிமாறு. நாம் பிறகு சாப்பிட்டுக் கொள்ளலாம்'' என்று சொன்னார்.

தஞ்சமாம்பாளோ அலட்சியத்துடன், "சோறும் கிடையாது, தண்ணீரும் கிடையாது. குலம், குடி பார்க்கவேண்டாம்; எந்தப் பிச்சைக்காரன் வந்தாலும் சோறு போட்டுவிட வேண்டுமா? அழகுதான்! தயாள குணத்துக்கும் ஒரு வரம்பு வேண்டும்!" என்று கூறிவிட்டு, குடத்தை எடுத்துக்கொண்டு, குளத்திற்குக் குளிக்கப் போய்விட்டாள்.

அன்பும் அறமும் உருவான இளையாழ்வாரின் இளகிய நெஞ்சம் அப்போது என்ன பாடு பட்டிருக்கும்?

மனைவி போனதும், ராமாநுஜர் அடுக்களையில் சென்று பார்த்தார். நிறையப் பழையமுது இருந்தது. பசியோடு வந்தவனை உட்காரவைத்துத் தாமே அவனுக்கு அமுது பரிமாறினார். அவன் பசியாற உண்டு விட்டு, அவரை வாழ்த்திவிட்டுச் சென்றான்.

மனைவி மனதறிந்து செய்த இரண்டாவது குற்றம், ராமாநுஜருக்கு இல்வாழ்வில் மேலும் விரக்தியை வளர்த்தது. 'இன்னும் ஒரு குற்றம்தான் பொறுப்பேன். அதற்கு மேல் பொறுக்கமாட்டேன். துறவு மேற்கொண்டு, சமூகத்திற்கும், சமயத்திற்கும், சர்வேசுவரனான நாரணனுக்குமே திருத்தொண்டு புரிவேன். இது திண்ணம்! சாத்திரங்களின் விதியும் இதுவே!' என்று தீர்மானித்தார். பேரருளாளனான வரதராசப் பெருமானைத் துதித்து, துயரைக் குறைத்துக்கொண்டார். திருக்கச்சிநம்பிகளின் இதமான நல்லுரைகளும் அவருக்கு ஆறுதல் அளித்து வந்தன. இருந்தும், வருங்காலத்தைக்

குறித்துப் பல பல சிந்தனைகள் அவருள்ளத்தில் அலை பாய்ந்து கொண்டிருந்தன.

திருக்கச்சிநம்பிகள், ராமாநுஜரின் ஐயப்பாடுகளைப் போக்கிச் சில உபதேசங்கள் செய்தார். அவை வரதராசப் பெருமானே அருளியவை என்றே ஏற்றுக்கொண்டார் ராமாநுஜர். காரணம், ராமாநுஜர் பல நாட்களாக விடை காணுமல் குழம்பிக் கொண்டிருந்த விஷயங்களுக்கெல்லாம் தக்க சமாதானங்களாக அவை அமைந்திருந்தன. அவைகளின் சுருக்கம்:

உலகப் படைப்புக்கெல்லாம் ஆதிமுதல்—பிறப்பிடம் இயற்கையெனப்படும் 'பிரகிருதி.' அதற்குப் பிறப்பிடம்—ஆதிகாரணம் பரப்பிரும்மமான நாரணன்.

உயிரினங்களுக்கும் பரம்பொருளுக்கும் உள்ள வேறுபாடு வெளிப்படையே. பிறப்பு—இறப்பு எனும் வாழ்வுச்சுழலிலிருந்து விடுதலை (மோட்சம்) பெற விரும்புபவர்களுக்கு ஒரே புகல்—பகவானிடம் தம்மைச் சமர்ப்பணம் செய்துகொள்வது தான்; 'எல்லாம் அவனே; எல்லாமே அவனுக்காக; அவன் திருவடிகளுக்குத் தொண்டு புரிவதே என் பிறவிப்பயன்; ஜீவராசிகள் யாவுமே அவன் சொரூபங்கள்; ஜீவனுக்குச் செய்யும் பணி பரமனுக்குப் புரியும் திருத்தொண்டு,' என்ற கொள்கையைத் திட நம்பிக்கையுடன் கடைப் பிடித்து வரவேண்டும். பக்தர்கள் பிழை செய்தாலும் பொறுத்தும், தடுத்தாட் கொண்டும்

அருள் புரியும் உதார குணம் கொண்டவன் பரம் பொருளான நாராயணன். வைணவ பக்தர்கள் உயிர் நீத்ததும், பரமனின் பேரருளால் வைகுந்த விண்ணகரை அடைவார்கள்;அங்கு நாரணனுக்குத் திருத்தொண்டு புரிந்து, திவ்ய தரிசனத்திலேயே லயித்து, உய்வு பெறுவார்கள்.

இத்தத்துவங்களேக் கேட்டதும், பரவசத்தால் மெய் சிலிர்த்து, நம்பிகளேப் பன்முறை சென்னி சாய்த்து வணங்கினுர் ராமாநுஜர். அகக்கண் திறந்து விட்டாற் போன்ற பூரிப்பு அகமும் புறமும் அவ ருக்கு மலர்ந்தது. தாம் ஓர் உயரிய இலட்சியத்திற் காகவே பிறந்திருக்கிறேம்; அதற்கு ஏற்ப இலட்சிய வாழ்க்கையே வாழவேண்டும் என்கிற உணர்வு இளே யாழ்வாருக்கு மேலோங்கியது. இதைக் குறிப்பா லறிந்த திருக்கச்சிநம்பிகள், "சுவாமி! திருவரங்கத் தில் நீங்கள் குடியேறி, அங்குள்ள வைணவப் பெரிய வர்களுடன் நட்புறவு கொள்ளவேண்டும். முக்கிய மாக, ஆளவந்தாரின் பிரதான சீடரான பெரிய நம்பிகளே ஆசாரியராக வரித்து, அவரிடம், தமிழ் மறைகளேயும், வைணவ தத்துவ நூல்களேயும், சம் பிரதாய முறைமைகளேயும் கற்றுத் தேர்ச்சி பெற வேண்டும். எம்பெருமானின் ஆணே போல், இந்த யோசனே என் உள்ளத்துள் ஒலித்துக்கொண்டிருக் கிறது. நீங்கள் இதைத் தட்டாமல் மேற்கொள் ளுங்கள்" என்ருர்.

ராமாநுஜர் நம்பிகளின் அருளுரையை ஏற்று, மறுதினமே, பெரியநம்பிகளேத் தரிசிக்கத் திருவரங் கத்திற்குப் புறப்பட்டார்.

ஆளவந்தார் காலமானதும், வைணவ ஆசாரிய பீடத்தின் பிரதிநிதியாக திருவரங்கப் பெருமாளரையர் என்பவர் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார். இவர் ஆளவந்தாரின் பிரதான சீடர்களில் ஒருவர். திருவரங்கப் பெருமானிடம் மிகுந்த பக்தி ஈடுபாடு கொண்டவர்; சீலத்தில் சிறந்தவர்; சாத்திர நூல்களை நன்கு பயின்றவர். ஆயினும், ஆளவந்தாரைப் போல் விளக்கவுரைகள் கூறி மக்களை அறவழிப்படுத்தும் ஆற்றல் அவ்வளவாக இவருக்கு அமையவில்லை. மதத்தை வளர்க்கவும் பாதுகாக்கவும், சம்பிரதாயத்தைச் சிறப்பிக்கவும் நாவன்மையும், மேதாவிலாஸமும், கல்விப் புலமையும் சாத்திர ஞானமும், கம்பீரமான மேனிவளமும் ஒருங்கே நிரம்பப் பெற்றவரே சாலவும் சிறந்தவராகத் திகழமுடியும்.

ஆசாரிய அரயர், பெரியநம்பிகளை அழைத்து, "நீங்கள் காஞ்சி சென்று, இளையாழ்வாருக்குத் திருமந்திரதீட்சை செய்து, இங்கு அழைத்து வாருங்கள். அவரிடமே நம் ஆளவந்தார் தனிப் பரிவு கொண்டிருந்தார். நம் ஆசாரிய பீடத்திற்கு அவரே ஏற்றவர்'' என்று பணித்தார்.

பெரியநம்பிகள் தம் மனைவியையும் அழைத்துக் கொண்டு காஞ்சி நகர் நோக்கிப் புறப்பட்டார். ராமானுஜரிடத்தில் அவருக்குத் தனிப் பரிவு. தம்மைவிட இளையவராக இருந்தாலும் சீலத்திலும், புலமையிலும் தகைமையிலும் மேலானவர் அவர் என்ற எண்ணம் பெரிய நம்பிகளுக்கு. மேலும், தம் ஆசாரியருக்குப் பிரதிநிதியாகத் திகழப் போகிற

வர் என்கிற எண்ணமும் எழவே, ராமாநுஜரிடம் ஆதரவு அதிகமாயிற்று.

ராமாநுஜர் திருக்கச்சி நம்பிகளிடம் ஆசிபெற்று, பெரிய நம்பிகளைக் குருவாகக் கொள்ள திருவரங்கம் வந்து கொண்டிருந்தார். பெரிய நம்பிகளோ ராமா நுஜரைச் சீடராக ஏற்று அருள் புரியக் காஞ்சிக்கு வந்து கொண்டிருந்தார். தற்செயலாக, இருவரும் மதுராந்தகத்தில் கோயில் கொண்டுள்ள ஏரிகாத்த ராமரின் சன்னிதியில் சந்தித்துக் கொண்டார்கள். எவருடைய பெருமிதத்தை அதிகம் என்று சொல்ல முடியும்?

ராமாநுஜர் சிறு குழந்தைபோல் ஆனந்த பரவச மாகிப் பெரிய நம்பிகளின் திருவடிகளில் விழுந்து வணங்கினர்; அவைகளைப் பற்றிக் கொண்டார்; அவைகளில் சென்னியை வைத்து, ஆனந்தக் கண்ணீர் பெருக்கினர். பெரிய நம்பிகளோ, உடல்கூச, உள்ளம் விம்மிதம் கொள்ள, ராமாநுஜரை வாரி அணைத்துக் கொண்டார்.

ராமாநுஜர் பக்தியுடன், "சுவாமி! இந்த எளிய வனைச் சீடனுக ஏற்றுக் கொள்ள வேண்டுகிறேன். ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு உய்வுதரும் திருமந்திரத்தை எனக்கு உபதேசித்தருள வேண்டும். திருமந்திர தீட்சை பெற்றபின், இந்த அடியவனுக்கு வைணவ சம்பிரதாய நூல்களையெல்லாம் போதித்தருள வேண்டும். இதற்காகவே இந்த ஏழை தங்களை நாடி வந்து கொண்டிருக்கிறேன். எனக்கு இங்கேயே ராமபிரான் சன்னிதியில் திருமந்திர தீட்சை அருளப் பிரார்த்திக்கிறேன்" என்று வேண்டினர்

பெரிய நம்பிகள், "கிளம்புங்கள்; காஞ்சிபுரத்திற்கே போவோம். அங்கு பேரருளாளப் பெருமானின் சன்னிதியிலேயே உங்களுக்குத் திருமந்திர தீட்சை செய்து வைக்கிறேன்" என்றார்.

"சுவாமி! இனி என் பேராவலைத் தடுத்து வைத்திருக்க இயலாது. மனித வாழ்வின் நிலை மின்னலைப் போன்று நிலையற்றது. நம் ஆசாரியர் ஆளவந்தாரிடம் ஞானோபதேசம் பெறவேண்டுமென்று மிகவும் ஆசைப்பட்டு வந்தேன். என்ன ஆயிற்று? ஆகையால், இத்தகைய சுப காரியங்களைத் தள்ளிப் போடலாகாது. என் மனம் காலதாமதத்தைப் பொறுக்காது. கிருபை செய்து இங்கேயே எனக்கு அருள் புரிய வேண்டும்" என்று கூறி, பெரிய நம்பிகளின் திருவடிகளைப் பற்றிக் கொண்டார். பெரியவர் ராமானுஜரின் சிரத்தையை மெச்சி, அங்கேயே திருமந்திர உபதேசம் செய்ய ஒப்புக் கொண்டார்.

பெரிய நம்பிகள் ராமர் சன்னிதிக்கு எதிரிலுள்ள குளத்தின் கரையில், மகிழ மரத்தடியில், ஓமத்தீ வளர்த்து, விதிப்படி மந்திரங்கள் ஓதி, சங்கு-சக்கிர சின்னங்களை தீயில் காய்ச்சி, ராமானுஜரின் இடது—வலது தோள்களில் ஒற்றினார். ஸ்ரீ வைஷ்ண தீட்சைக்கு உரிய இரு சின்னங்களும் இளையாழ்வாரின் தோள்களில் தெளிவாகத் தெரிந்தன. பிறகு, ஆளவந்தாரைத் துதித்து, ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு உரிய திருமந்திரத்தை ராமானுஜரின் காதில் மெள்ள உபதேசித்தார். அதன் பொருள்:

"திருமகளோடு கூடிய நாராயணனுடைய
திருவடிகளையே புகலாகக் கொள்வேன்;
அந்த நாரணனுக்கு என் எளிய வணக்கம்!''

ராமாநுஜர் இத் திருமந்திரத்தை மும்முறை ஓதி, தமது உய்வுக்கு உரிய தாரக மந்திரமாக வரித்துக்கொண்டார்.

## துறவறம்

ராமாநுஜர் தம் இல்லத்திலேயே ஒரு பகுதியில் பெரியநம்பிகளைத் தங்க வைத்தார். அவர் குடும்பத்திற்கு வேண்டிய சௌகரியங்களை ராமாநுஜரே செய்து வந்தார். பக்தி சிரத்தையுடன் பெரிய நம்பிகளிடம் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தை முறையாகப் பயின்றார். மற்றும் பல வைணவ தத்துவ விளக்கங்களையும் கேட்டறிந்து வந்தார். இவ்விதமாக ஆறு மாதம் கடந்தது.

ஒரு நாள் காலையில் குருவும் சீடரும் சேர்ந்து வெளியே புறப்பட்டார்கள். சிறிது நேரத்திற்கெல்லாம் ராமாநுஜரின் மனைவி தஞ்சமாம்பாளும், குருபத்தினியும் (பெரிய நம்பிகளின் மனைவி) குளித்துவிட்டுத் தூய்மையுடன் கிணற்றடிக்குச் சென்றார்கள். இருவரும் ஒரே சமயத்தில் குடங்களைக் கிணற்றுக்குள் விட்டு, மேலே இழுக்கத் தொடங்கினார்கள். தஞ்சமாம்பாள் செருக்குடன், "உன் கண் அவிந்தா விட்டது? நான் குடத்தை

இழுப்பதற்கு முன் நீ எதற்காக இழுக்கிருய்? உன் குடம் என் குடத்தில் இடித்து விட்டதே. நான் மறுபடியும் சுத்தி செய்ய வேண்டுமே. குருபத்தினி என்கிற மமதை உனக்கு. என்னைவிடக் குல கௌரவத்தில் நீ தாழ்ந்தவள் என்பதை மறந்து விடாதே. உன் தந்தையைவிட என் தந்தை உயர் குலத்தவர். என் புருஷனின் பேதைமையால், உயர்வு தாழ்வு இல்லாமல் இப்படி அவதிப்பட வேண்டியிருக்கிறது. என் தலையெழுத்து!'' என்று சினந்தாள்.

இக் கடுஞ்சொல்லைக் கேட்டதும், பெரிய நம்பிகளின் மனைவி மிகவும் வருந்தினுள். பொறுமையுடன் பணிந்து போனுள். மன்னிப்புக் கோரினுள். பிறகு, வீடு வந்து துக்கம் தாளாமல் கண்ணீர் வடித்தாள். அப்போது பெரிய நம்பிகள் வந்துவிட்டார். நடந்ததை அறிந்ததும், அவர் மனம் மிகவும் வேதனைப்பட்டது. கடந்த ஆறுமாத காலத்தில் எவ்வளவோ மதிப்பாகவும் சுமுகமாகவும் கூடி வாழ்ந்து விட்டு, இப்போது இப்படியொரு அவமதிப்பு ஏற்பட்டு விட்டதே என்று கலங்கினுர். மனைவியையும் அழைத்துக்கொண்டு அப்போதே ஸ்ரீரங்கத்திற்குப் புறப்பட்டு விட்டார். வெளியே சென்றிருந்த ராமாநுஜருக்கு இதெல்லாம் தெரியாது.

ராமாநுஜர் அன்று பெரிய நம்பிகளுக்குச் சிறப்பாக விருந்து வைத்து, குருதட்சிணை அளிக்க வேண்டுமென்று தீர்மானித்திருந்தார். அதற்கான பொருள்களை வாங்கிவர அவர் கடை வீதிக்குச் சென்றிருந்தார். முன்னமே தெரிவித்தால், பெரிய நம்பிகள் மறுத்துவிடுவாரோ என்கிற ஐயம்.

பெரிய நம்பிகளிடம் ஆறுமாத காலத்தில் நாலாயிர திவ்யபிரபந்தம் முழுவதையும் கற்று, அவைகளின் நுண்ணிய கருத்துக்களையும் உணர்ந்து கொண்டிருந்தார். இதில் ஆசிரியருக்குப் பெருமிதம். 'இத்தகைய மாணுக்கருக்குப் போதிப்பதற்குத் தவம் கிடந்திருக்க வேண்டும். புண்ய பலன்தான் இது' என்று எண்ணியிருப்பவர் குருதட்சிணையை எப்படி ஏற்பார்? அதனுல்தான், சொல்லாமல் செய்ய முனைந்தார் ராமாநுஜர். ஆனுல், அவருக்கோ வீடு திரும்பியதும் பெருத்த ஏமாற்றமும் தலையிறக்கமுமே ஏற்பட்டன.

மனைவியின் துடுக்குத் தனத்தை அறிந்த ராமாநுஜர் அவளை மிகவும் கடிந்து கொண்டார்; தம் துரதிருஷ்டத்தை எண்ணி நொந்து போனுர். "உன் முகத்தில் விழிப்பதே பாவம்!" என்று சொல்லி விட்டுக் குருவிற்காகக் கொணர்ந்த காணிக்கைப் பொருள்களை வரதராஜப் பெருமாளின் சன்னிதியில் சமர்ப்பிக்க எடுத்துச் சென்றுவிட்டார்.

தஞ்சமாம்பாளுக்கு அப்போதும் தன் தவறு தெரியவில்லை. பெரிய நம்பிகளையே மனத்துள் ஏசினுள்; 'படித்த மகான், சாது, சிறந்த வைணவர் என்றெல்லாம் புகழ்மட்டும் வந்து சேர்ந்து விட்டது. அதற்கு ஏற்ப, சீற்றமில்லாமல் பெருந்தன்மையுடன் நடந்து கொள்ளத் தெரியவில்லையே; இவரென்ன சாது? மனைவி பேச்சைக் கேட்டுக்கொண்டு, சொல்லிக் கொள்ளாமலேயே ஊரைவிட்டுப் போகலாமா இவர்?'—இப்படியெல்லாம் குறைகூறிக் கொண்டிருந்தது அவளது பேதமை மனது.

அப்போது, ஓர் ஏழை அந்தணர் பசியும் சோர்வுமாக, அன்னதானம் பெற அங்கு வந்தார்; பெரிய நம்பிகளுக்காகச் செய்து வைத்திருந்த விருந்துச் சாப்பாடு அப்படியே இருந்தது. ஆனால், தஞ்சமாம்பாளுக்கு மனம்தான் மாசுபட்டிருந்ததே. ஆத்திரத்துடன், "சோம்பேறிச் சத்திரமா இது? வேறெங்காவது போய்ப் பார், போ! இங்கே சோறும் இல்லை; தண்ணீரும் இல்லை. உங்களுக்கெல்லாம் பொங்கிப்போட நான் சோற்றுக்கடனா பட்டிருக்கிறேன்?" என்று ஏசி, வந்த அந்தணரை விரட்டி விட்டாள். அவர் ராமாநுஜருக்கு உற்ற நண்பர்; ஏழையானாலும், பண்பும், புலமையும் மிக்கவர். "அம்மணி! நான் வந்த நேரம் சரியில்லை. என் பிழையைப் பொறுக்க வேணும். என் கேடு காலம் உங்களைக் கோபத்திற்கு உள்ளாக்கிவிட்டது. மன்னிக்க வேண்டும்" என்று சொல்லிவிட்டு, கோயிலுக்குச் சென்றார். அங்கே ராமாநுஜரைச் சந்தித்ததும், அவருடைய பாதங்களில் விழுந்து வணங்கி, மன்னிப்புக் கேட்டார். முதலில் திகைத்து நின்ற ராமாநுஜர், பிறகு நடந்ததை அறிந்தார். அவர் மனம் தீயிலிட்டதைப் போல் பரிதவித்தது. மனமிடிந்து போய், பெருமானுக்கு எதிரே தண்டனிட்டு விழுந்தார். கண்ணீர் பெருக, அப்படியே கிடந்தார். 'மனைவி செய்யும் பாவத்தில் கணவனுக்கும் பங்கு வந்து சேரும்; இப்படியொரு தகாத துணைவியை எனக்கு அளித்து, என்னைச் சோதிக்கலாமா? எனக்கு இனி மனைவாழ்வு போதும். நான் துறவு பூண அருள் பாலிக்கவேணும். என்

அறிவு, உழைப்பு எல்லாம் நாரணனுக்கும், அவரது வழிபாட்டு வழியான வைணவத்திற்குமே அர்ப் பணிப்பாக அமையவேண்டும். இதுதான் என் வாழ்வின் இலட்சியம். இக்குறிக்கோளை சிறிதளவா வது நிறைவேற்ற எனக்கு வாய்ப்பு அருள வேணும். பேரருளாளப் பெருமானே! நீங்கள்தான் புகல்!'' என்று உள்ளக் குரலெழுப்பி முறையிட்டார்.

கோவில் மணி ஒலித்தது.

'சர்வேசுவரனின் சம்மதம் கிடைத்துவிட்டது! சாத்திர முறைமைப்படி, மனைவி மனதறிந்து செய்த மூன்று பிழைகளைப் பொறுத்தாகி விட்டது. இனி பொறுக்கவேண்டாம். துறவறம் மேற்கொள்வது தான் தர்மம். என் இலட்சிய சாதனைகளுக்கு வழி வகுக்கவே எம்பெருமான் இப்படியொரு நிலையை ஏற்படுத்தியிருக்கிறாரோ?' என்று எண்ணி, சிறிது ஆறுதலும் கொண்டார் ராமாநுஜர்.

உடனே அந்த அந்தணரை அழைத்து, குருதட் சிணைக்காக தான் வாங்கி வந்த காணிக்கைப் பொருள்களில் சிலவற்றை அவரிடம் கொடுத்து, "என் வீடு ஏறி வந்து எவரும், பட்டினியோடு திரும்பு வது கிடையாது. என் போதாத காலம் இன்று இப்படி ஆகிவிட்டது. நீங்கள் இந்தப் பொருள்களை என் அகத்துக்காரியிடம் கொடுங்கள். அவளுடைய பிறந்தக ஊரிலிருந்து வருவதாகச் சொல்லுங்கள். அவளுடைய பெற்றோர்கள் அவளைப் பார்க்க விரும் புவதாகவும், உடன் வர விரும்பினால் அழைத்துப் போவதாகவும் சொல்லுங்கள். அவளும் பிறந்த கம் போய்விட வேண்டுமென்று சில நாட்களாக வற்

புறுத்திக் கொண்டிருக்கிறுள். எனக்கு ஆறுதல் அளிக்க, நீங்கள் இக்காரியத்தைச் செய்யவேண்டும். இதனுல், எனக்கு மேன்மையுண்டு; என் அகத்துக் காரிக்கும் கஷ்ட-நஷ்டம் ஏதும் கிடையாது. நல்ல நோக்கத்தில், நன்மை தரும் செயலுக்காகப் பொய் சொல்வது அதர்மமாகாது. தர்ம சூட்சுமம் இது. இப்போதே கிளம்புங்கள்.'' என்று அறிவித்து அனுப்பி வைத்தார் ராமாநுஜர்.

அந்த அந்தணரும் அவ்விதமே செய்தார். தஞ்சமாம்பாள் உவகையுடன் அவரை எதிர்கொண்டழைத்து, உபசரித்து, விருந்து படைத்தாள். அன்றே பிறந்தகத்திற்கும் புறப்பட்டு விட்டாள். கணவரிடம் பரிவோ, பக்தியோ கொள்ளவில்லை. கணவரின் உயரிய நோக்கங்களையும் கருணை குணத்தையும் அவள் ஏற்கவில்லை. 'இங்கிருந்து போனுல் போதும்,' என்ற மனப்பான்மையே அவளுக்கு வளர்ந்திருந்தது.

ராமாநுஜர் மறுநாளே வரதராஜப் பெருமானின் சன்னிதியில், இல்லற ஆசைகளையும் பெண்டு, பிள்ளை, பொருள் ஆகிய பாசபந்தங்களையும் அறவே துறந்ததாகச் சபதம் செய்து துறவறம் மேற்கொண்டார்.

''ஜீவராசிகளுக்கெல்லாம் ஜீவாதாரனுன சர்வேசுவரா! எனக்கும் நீங்களே நாதன். இன்று முதல் அடியேன் தங்களுடைய அடியவன்; தங்களுக்கே உரியவன். தங்களுக்கு உவந்த தர்ம வழியில் திருத்தொண்டு புரிந்துவருவேன். இந்த எளிய ஜீவனை

ஆட்கொள்ளவேணும், சர்வேசா!'' என்று முறை யிட்டார்.

மணியோசை கார்வைகளெழுப்பி ஒலித்தது. ராமானுஜர் தண்டனிட்டு வணங்கி எழுந்தார். அப் போதே காவியாடை தரித்து, முக்கோலும் தாங்கி, இளம் பருதிபோல் திவ்யதேஜசுடன் வெளிப் பட்டார். 'மனம், வாக்கு, உடல் மூன்றையும் தம் வசத்திலேயே வைத்திருப்பேன்' என்பதைக் காட்டு வதைப்போல், அவர் முக்கோலை இறுக, உயர்த்திப் பற்றிக் கொண்டு, கோவிலுக்கு எதிரிலுள்ள குளக்கரைக்கு வந்தார்.

''யதிராஜா!''

ராமானுஜர் பிரமிப்புடன் நாலு பக்கமும் பார்த்தார். யாரும் புலப்படவில்லை.

''யதிராஜா!''

குரல் மேலும் உரக்க ஒலித்தது. அதன் எதி ரொலி, மதில்களில் பட்டு, பலப்பல குரல்களாக எழும்பிக் கோஷித்தது. இராமானுஜர் இரு கைகளை யும் உயர்த்தி, அஞ்சலி செய்து, ''பேரருளாளா! திருவரங்கப் பெருமானே! எம் ஆசார்யப் பெருமக் களே! சரணம்! சரணம்!....'' என்று கோஷித்தார். இதன் எதிரொலி பெருவெளியில் வியாபித்தது.

'' யதிராஜா !''—திருக்கச்சிநம்பிகள், 'துறவி களிலே தலைசிறந்தவர்' என்று ராமானுரை உரக்க விளித்தவாறு குளக்கரை மண்டபத்திலிருந்து ஓடி வந்தார். ராமானுஜரின் திருப்பாதங்களில் சென்னி சாய்த்து வணங்கினார் அந்த முதிய ஞானி !

யதிராஜர் கூசிக் குறுகி, விலகிக்கொண்டார்.

## ஆட்கொள்ளும் அன்பு

துறவத்தை மேற்கொண்டதும், ராமாநுஜரின் புகழ் வைணவர்களிடையே மட்டுமல்லாமல், மற்ற சமயத்தாரிடையேயும் பரவி வந்தது. வாலிப வயதில் உயர்ந்த இலட்சியத்திற்காகத் துறவு பூணுபவர் மிக அரிது. மேலும், கல்வி கேள்விகளில் தேர்ந்து, பண்பில் சிறந்து விளங்கும் ஒருவர் வைணவத்தை (திருமால் வழிபாட்டை)ப் பரப்புவதற்கென்றே முன் வந்திருப்பது பெருமை தேடிக் கொடுக்கத்தானே செய்யும்!

சுத்தமான தீப்பிழம்பு போல், ராமாநுஜர் காவியுடையில் வெளிவரும் போது, பார்ப்பவர் பக்திபரவச மாவார்கள். பலர் அவருடைய சீடர்களாக முன்வந்தார்கள். எல்லாரையும் அன்புடன் ஏற்று, பக்தி வழிபாட்டின் சிறப்பைப் போதித்து, பண்பு மிகுந்து வாழும் கோட்பாடுகளையும் அறிவுறுத்தி, வைணவத்தைப் பரப்பி வந்தார் எதிராசர். ஆழ்வார்களின் பக்திச் சுவை நிறைந்த மதுரமான பாக்களை வைணவர்கள், தினமும் பாடிப் பரவசமாக வேண்டும் என்று உபதேசித்து வந்தார். இதனுலேயே 'இளையாழ்வார்' என்றும், 'தமிழ்த்தலைவன் (பேயாழ்வார்) பொன்னடி போற்றும் ராமாநுசன்'; 'சூடிக்கொடுத்தவள் (ஆண்டாள்) தொல்லருளால் வாழ்கின்ற வள்ளல்' என்றும், 'ஓதிய வேதத்தின் உட்பொருளாய், அதனுச்சி மிக்க சோதியை நாத

னென அறியாது உழல்கின்ற தொண்டர் பேதமை தீர்த்த ராமாநுசன்' என்றெல்லாம் பெரியவர்கள் எதிராசரைப் போற்றினுர்கள்.

வேதசாத்திரங்களில் தேர்ந்த பல வித்துவான்கள் ராமாநுஜரின் உற்ற சீடர்களானுர்கள். முதலில், முதலியாண்டான் எனும் மேதை ராமாநுஜரிடம் உபதேசம் பெற்று சீடரானுர். இவர் ராமாநுஜருக்கு உறவினர்.

அடுத்தபடியாக கூரேசர் என்பவர் ராமாநுஜரிடம் சீடராக வந்து சேர்ந்தார். இவர் கூரம் எனும் கிராமத்திற்குச் சொந்தக்காரரர்; அரச வைபவத்தோடு வாழ்ந்து வந்த செல்வந்தர். இவருக்கு ஆண்டாள் என்று பெயருள்ள மனைவி இருந்தாள்; அழகும் பண்பும் நிரம்பியவள். வைணவத்தில் தீவிர ஈடுபாடு கொண்டிருந்தவராதலால் கூரேசருக்குக் கூரத்தாழ்வார் என்று பெயர் ஏற்பட்டது. இவர் தம் செல்வங்களையெல்லாம் தான தர்மம் செய்துவிட்டு, எளிய வாழ்க்கையை மேற்கொண்டார். வடமொழியிலும் சாத்திர நூல்களிலும் ஒப்பற்ற புலமை உள்ளவர். திருக்கச்சி நம்பிகளோடு நட்புறவு கொண்டவர். இதனுல், ஆழ்வார்களுடைய பக்திப் பாடல்களில் பேரார்வம் கொண்டார். அவைகளை முறையாகப் பயின்றுர். நம்பிகளின் அறிவுரையால், கூரத்தாழ்வார் ராமாநுஜரை ஞானசிரியராக ஏற்றுர். சிறந்த குருவை அடைந்ததில் சீடருக்குப் பெருமை; மேதாவியான சீடரை அடைந்ததில் குருவிற்கும் பெரும்புகழ் தான். கூரத்தாழ்வாரின் நினைவாற்றல் ஒப்பற்றது.

எத்தகைய விஷயத்தையும் ஒரு முறை கேட்டுவிட்டாரானுல் போதும், அவர் மனத்தில் பதிந்துவிடும். மேலும், விரைவாக எழுதும் திறமையும் கொண்டவர். ஆசாரியரிடம் அவர் கொண்டிருந்த பக்திக்கு ஈடு-இணையே கிடையாது. வைணவம் தழைக்கவே தம் அறிவு, ஆற்றல், செயல் சகலமும் என்று உறுதி பூண்டு அறவாழ்வு வாழ்ந்த மகான் அவர். 'மொழியைக் கடக்கும் பெரும் புகழான் நம் கூரத்தாழ்வான்' என்று வைணவப் பெருமக்கள் அவரைப் போற்றியிருக்கிருர்கள். ராமானுஜரின் கருணை குணமும், அன்பு தவழும் பேச்சும், உயரிய குறிக்கோளும் கூரத்தாழ்வாரை மிகவும் வசீகரித்தன. ராமானுஜரிடம் பக்தி ஈடுபாடு கொண்டவர்களை யெல்லாம் அந்த அருங்குணங்களே ஆட்கொண்டு வந்தன.

ஒரு நாள், யாதவப்பிரகாசரின் தாய் எதிராசரைத் தற்செயலாகச் சந்தித்தாள். அவர் வைணவ மடத்தில் சீடர்களுக்கு உபதேசம் செய்து கொண்டிருந்தார். பொன்னிறமான மேனி; ஒளிபடைத்த கண்கள்; அகன்ற நெற்றி; வசீகரமான கம்பீரத் தோற்றம்; அன்பு துளும்பும் பேச்சு—இவைகளை யெல்லாம் கண்டாள் அந்த அம்மையார். உடனே, வீடு சென்று யாதவப்பிரகாசரிடம் ராமானுஜரின் சிறப்புக்களை வர்ணித்தார். அவருக்கு முதலில் பெருமையாகத்தான் இருந்தது; தம்மிடம் பயின்று வந்த ஒரு மாணுக்கர் மதாசாரியராகத் திகழ்கிருரே! இத்தகையவரை நாம் முதலில் வெறுத்தோமே, கொல்லவும் துணிந்தோமே என்கிற கழிவிரக்கமும்

எழாமலில்லை. நேரில் போய் சந்தித்துவிட்டு வரலாமென்று புறப்பட்டார் யாதவப்பிரகாசர்.

யதிராஜரான ராமாநுஜர் யாதவப் பிரகாசரை ஆதரவோடு வரவேற்றார்; உபசரித்தார்; ஆசனமளித்துக் கௌரவித்தார். தெய்விகப் பொலிவுள்ள ராமாநுஜரின் திருமுகத்தைக் கண்டதும் யாதவப் பிரகாசருக்குத் தனி ஆதுரம் கிளர்ந்தது. வைணவ தத்துவத்தின் பழைமை பற்றி அவர் ஆராய்ந்தார். ராமாநுஜர் தமது முந்திய குருவோடு தாமே தத்துவ சர்ச்சை செய்ய விரும்பாமல், கூரத்தாழ்வாரை ஈடுபடுத்தினர். அவர்தான் சாஸ்திரங்களில் கரை கண்டவராயிற்றே. சாமவேதத்திலிருந்து பல மேற்கோள்களைக் காட்டி, வைணவ சின்னங்களும், வைணவ நெறிமுறையும் வேதகாலம் தொட்டே நிலவி வருவதை விளக்கினர். மேலும், "நாராயணனே பரம்பொருள்; பரப்பிரும்மம் எனப்படுவதும் அவரே" என்று பல வேத வாக்கியங்களாலும் விளக்கி, பக்தி நெறியின் சிறப்பையும் விவரித்தார் கூரத்தாழ்வார்.

யாதவப்பிரகாசரின் மனம் வைணவத்தில் லயித்தது. உடனே ராமாநுஜரின்பாதங்களைப்பற்றிக் கொண்டு, தம்மை ஆட்கொள்ள வேண்டினர். அன்பே உருவான ராமாநுஜர், யாதவரை ஆதரவுடன் அங்கீகரித்து, அவருக்கு ஞானோபதேசம் செய்து, கோவிந்த ஜீயர் எனும் புதுப் பெயரையும் சூட்டிவைத்தார். சிலகாலம் ராமாநுஜருடன்இருந்து கொண்டே வைணவம்,திவ்வியப் பிரபந்தம் முதலியவைகளைக் கற்றுவந்தார் கோவிந்த ஜீயர்.

ராமாநுஜர் அவரிடம் 'துறவிகளின் நெறிமுறைகள்' எனும் பொருள் குறித்து, சிறந்ததொரு நூலை இயற்றித் தருமாறு பணித்தார். அதன்படி, யாதவர் 'யதி தர்ம ஸமுச்சயம்' எனும் அரிய நூலை இயற்றி, யதிராஜருக்குக் குரு தட்சிணையாக அர்ப்பணித்தார். இதன் மூலம், வைணவத் துறவிகளிடம் பிறமதத்துப் பெரியோர்களுக்கும் நல்ல மதிப்பு ஏற்பட்டது. வயோதிகமடைந்துவிட்ட கோவிந்த ஜீயர் அதிக காலம் உயிர் தரிக்கவில்லை.

திருவரங்கத்தில் ஆசாரிய பீடத்தில் வீற்றிருந்த திருவரங்கப்பெருமாள் அரையரே நேரில் காஞ்சிபுரம் எழுந்தருளி, ராமாநுஜரை உடனழைத்துக்கொண்டு ஸ்ரீரங்கம் வந்து சேர்ந்தார். வைணவப் பெரியோர்கள் பேருவுகை கொண்டார்கள். ராமாநுஜரை வைணவ ஆசாரிய பீடத்தில் அமர்த்திக் கௌரவித்தார்கள். தினமும் அவருடைய அரிய தத்துவ போதனைகளையும் சம்பிரதாய உபதேசங்களையும் கேட்கத் திரள் திரளாக ஜனங்கள் வந்து போனார்கள். வைணவத்திற்குத் தனி விளக்கமும், அன்பும் அருளும் ஆதரவுமே அடிப்படைகளாகக் கொண்ட சம்பிரதாய வெளியீடும் ராமாநுஜரைத் தனித்திறன் பெற்ற பரமாசாரியராக விளங்க வைத்தன. அவர் மூலமாகப் பல மேதர்விகள் வைணவத் திருத் தொண்டர்களானார்கள்.

ராமாநுஜருக்கு ஒரு மனக்குறை: 'எவ்வளவோ வித்துவான்கள் வைணவத்திற்குத் தொண்டு புரிய வலிய வந்து சேர்ந்துகொண்டிருக்கிறார்கள். என் தம்பி கோவிந்தன் மட்டும் காளத்தியில் வைணவ

மதப் பற்றும், சம்பிரதாய நெறியும் இல்லாமல் வாழ்ந்து வருகிறுனே' என்று கவலை கொண்டார். அந்த உடன் பிறந்தானை வைணவ நெறியில் சேர்க்க வேண்டுமென்று திருவுள்ளம் கொண்டார்.

காளத்திக்கு அருகேயுள்ள திருப்பதியில் திருமலை நம்பிகள் எனும் வைணவ பக்தர் இருந்தார். அவர் கல்வியில் சிறந்தவர்; நெறி வாழ்வு நடத்தும் சீலர்; அவரிடம் பல சீடர்கள் கல்வி பயின்று வந்தார்கள். ராமாநுஜர் அவருக்கு ஒரு கடிதம் அனுப்பி வைத்தார். அதில் கோவிந்தரை வைணவத்தில் சேர்க்க முயலவேண்டுமென்று அறிவித்திருந்தார். ஆசாரியரின் கோரிக்கையை நிறைவேற்ற திருமலை நம்பிகள் சீடர்களுடன் காளத்திக்கு வந்து சேர்ந்தார். குளக்கரையில் தங்கியிருந்தார்.

அங்குதான் கோவிந்தர் தினமும் நீராடவும் மலர் கொய்யவும் வருவது வழக்கம். நம்பிகளின் வைணவத் திருப்பாக்களையும் விளக்கவுரைகளையும் அந்த சமயத்தில் சிறிதளவு கேட்டார். அவர் மனம் வைணவத்தில் நாட்டம் கொள்ளத் தொடங்கியது. இந்த மனமாற்றத்தையே எதிர்பார்த்த நம்பிகள், மறுநாள் ஆளவந்தாரின் 'தோத்திர ரத்தின' கீதங்களிலிருந்து ஒன்றை இலையில் எழுதி கோவிந்தர் கண்ணில் படும்படி போட்டுவிட்டு, சீடர்களுடன் திருப்பதிக்குச் சென்றுவிட்டார். கோவிந்தர் அந்தத் தோத்திரத்தை எடுத்துப் படித்தார். அதன் முழுப் பொருளையும் அறிய அவா கொண்டார். நாராயணனின் குணுதிசயங்களை வர்ணிக்கும் தோத்திரம் அது. மேலும், நம்பிகளின் பிரசங்கத்தைக் கேட்கவேண்

டும்; அவரிடம் இந்த சுலோகத்தின் முழுப்பொருளே யும் அறிந்து கொள்ளவேண்டும்; மேலும் இத்தகைய துதிகளேக் கேட்கவேண்டும் என்று அவா கொண் டார். ஆளவந்தாரின் தோத்திரப் பாக்கள் காவிய நயமும், சொல்லழகும், பக்தி உணர்ச்சியும் மேலோங் கியவை. அவை அறிவாளிகளே வசீகரித்து பரவசப் படுத்தும். ராமாநுஜரை ஆட்கொண்ட திறன் அவை களுக்கு உண்டு; ஆதலாலேயே அந்தத் துதிப் பாக் களில் ஒன்றை கோவிந்தரை ஆட்கொள்ளவும் நம்பி கள் பயன்படுத்தினர். அவர் முயற்சி பயன் தந்தது.

சில தினங்களுக்குப் பிறகு, திருமலே நம்பிகள் காளத்திக்குச் சீடர்களுடன் வந்து சேர்ந்தார். கோவிந்தர் நம்பிகளே வணங்கித் தம்மையும் சீட ராக்கிக் கொள்ள வேண்டினர். தம் தமையனர் இளே யாழ்வாரான ராமாநுஜர் ஆசாரிய பீடத்தில் அமர்ந்திருப்பதை அறிந்து பெருமிதம் கொண்டார். திருமலே நம்பிகள் கோவிந்தரைத் திருப்பதிக்கு அழைத்துச் சென்று, முறைப்படி திருமந்திர திட்சை அளித்து ஸ்ரீவைஷ்ணவராக்கினர்.

இவ்விதமே, பல பெரியோர்கள் எதிராசரின் அன்புள்ளத்தால் ஆட்கொள்ளப்பட்டு வைணவரா னர்கள். வைணவத் திருத்தொண்டு வளர்ந்து வந் தது. இதனல், எதிராசரின் புகழ் வியாபித்தது. குறிப்பாக, பரந்த நோக்கும், இரக்க உள்ளமும், உதாரண குணமும், நெறி வாழ்வும், ஞான வளமும், அருள் சக்தியும் ஒருங்கே உடையவராகத் திகழ்ந்த தால், ராமாநுஜரை வைணவர்கள் உடையவர் என்று ஆதரவாக அழைத்தார்கள்.

## கருணைக் கடல்

எதிராசர் திருவரங்கம் வந்து சேர்ந்தபின் பெரிய நம்பிகளிடம் சீடராகி, வைணவ நூல்களைப் பயின்று வந்தார்; பெரிய நம்பிகளுக்கு ராமாநுஜரிடம் தனி மதிப்பு. முன்பு, அவருடைய மனைவியின் துடுக்குப் பேச்சால் மனம் வருந்தி, சொல்லிக் கொள்ளாமலேயே ஸ்ரீரங்கம் வந்துவிட்ட பிறகும், அந்த ஆதரவு குறையவில்லை. உடையவரின் குண நலச் சிறப்போ எதிரியையும் உற்றவராக்கிவிடும் திறன் படைத்தது. உத்தமமான சீடருக்கு எடுத்துக்காட்டாக விளங்கிவந்தார் எதிராசர்.

ஒருநாள் பெரிய நம்பிகள் ராமாநுஜரிடம், "சுவாமி! பக்கத்து ஊரான திருக்கோட்டியூரில் கோஷ்டி பூரணர் எனும் மகான் இருக்கிறார். அவர் ஆளவந்தாரின் அந்தரங்க சீடர்களில் ஒருவர். அவருக்கு ஆளவந்தார் திருமந்திரத்தின் உட்பொருளையும் அரிய சக்தியையும் உபதேசித்திருக்கிறார். நீங்கள் அவரிடம் சென்று, அந்த ரகசியத்தை உபதேசம் பெற்றுவாருங்கள். அதன் மூலம் உங்களுக்கு மகிமை வளரும். ஆசாரியர் அறியவேண்டிய தத்துவம் அது." என்றார்.

உடையவர் மறுதினமே திருக்கோட்டியூர் சென்றார். கோஷ்டி பூரணரைத் தரிசித்து, தம் விருப்பத்தைத் தெரிவித்தார். ஆனால், அவரோ ராமாநுஜரை ஒருமுறை ஏற இறங்கப் பார்த்தார். "இப்போது

சௌகரியப்படாது. வேறொரு நாளைக்கு வாருங்கள்'' என்று பதில் சொல்லி அனுப்பிவிட்டார்.

உடையவர் சில தினங்கள் கழித்து மறுமுறையும் திருக்கோட்டியூர் சென்றார். அம்முறையும் ஏதோ பொதுவாகப் பேசிக் கொண்டிருந்துவிட்டு, "இந்தத்தடவை திருமந்திர உபதேசம் இல்லை; மறுமுறை வாருங்கள், பார்க்கலாம்.'' என்று சொல்லி எதிராசரைத் திருப்பி அனுப்பிவிட்டார் பூரணர்.

ராமாநுஜாசாரியர் மறுமுறையும் சென்றார். அம்முறையும் பழைய பதிலையே சொல்லித் திருப்பி அனுப்பிவிட்டார் பூரணர். இவ்வாறு பதினெட்டு தடவைகள் சலிப்பில்லாமல் பூரணரிடம் உபதேசம் பெறச் சென்றார். அப்படியும் தம் பேரில் பூரணருக்குப் பரிவு ஏற்படாததைக் கண்டு, மனங்கலங்கி உடையவர் அழுதே விட்டார். இதை அறிந்த கோஷ்டி பூரணர் இரக்கம் கொண்டு, "உடையவரைப் பவித்திரமும் (தர்ப்பைப் புல்லால் செய்து, கை விரலில் அணியும் புனித சின்னம்), முக்கோலும் (துறவிக்கு உரிய சின்னம்) கூடியவராக இங்கே அழைத்து வாருங்கள்'' என்று கூறித் தம் சீடர்களைத் திருவரங்கத்திற்கு அனுப்பி வைத்தார்.

எதிராசரின் ஆனந்தத்திற்குக் கேட்பானேன்? கூரத்தாழ்வாரையும் முதலியாண்டானையும் உடனழைத்துக்கொண்டு திருக்கோட்டியூர் வந்து சேர்ந்தார். பூரணரிடம் சென்றபோது, "நான் உங்களை முக்கோலும் பவித்திர அணியும் கொண்டுதானே வரச் சொன்னேன். இரு சீடர்களை உடன் அழைத்து வந்திருக்கிறீர்களே!'' என்று ஆட்சேபணை கூறினார்.

உடையவர்,“ சுவாமி! தேவரீர் ஆணையிட்ட படியே பவித்திரமும் முக்கோலுமாக வந்திருக் கிறேன். இதோ, இந்தக் கூரத்தாழ்வார் இருக் கிறாரே, இவர் எனக்கு மட்டுமல்ல, நம் ஸ்ரீவைஷ் ணவ சம்பிரதாயத்திற்கே பவித்திர அணி போன்ற வர்; அடுத்தவரான முதலியாண்டான் துறவி களுக்கு உறுதுணையான முக்கோல் போன்றவர். ஆகையால் நான் இவ்விருவருடன் வந்திருக்கிறேன். இம்முறையாவது தயை கூர்ந்து திருமந்திரத்தின் பிரபாவத்தை உபதேசித்தருளவேண்டும்,” என்று வேண்டிக்கொண்டார்.

கோஷ்டிபூரணர் ராமாநுஜாசாரியாரின் ஈடுபாட்டையும் சிரத்தையையும் கண்டு திருப்தி கொண்டார். திருமந்திர ரகசியத்தை உபதேசம் செய்தருளினார். எதிராசர் பேரின்பநிலையை அடைந்து விட்டவர்போல் களிப்படைந்தார். பூர ணர் அப்போதும் மறுமுறையாக எதிராசரை எச் சரித்தார். “இளையாழ்வாரே! இந்த மந்திர ரக சியம் திருவரங்கநாதரின் திருவருளால் நம் பரம ஆசாரியர் ஆளவந்தார் அவர்களின் திருவாக்கால் எனக்கு மட்டுமே கிடைத்த அரிய பொக்கிஷம். இதைத் தினமும் தியானிப்பதன் மூலம் மனிதர்கள் பிறவித்தளை நீங்கி, வைகுந்த விண்ணகரம் சேர முடியும். இதைப் பக்தி சிரத்தை அற்றவருக்கோ, குணநலம் குறைந்தவருக்கோ, தகுதி இல்லாதவருக் கோ உபதேசிக்கவே கூடாது. இந்த முறைமையை மீறினால் உங்களுக்கு நரகவாழ்வுதான் கிட்டும். இதை மறந்து விடாதீர்கள்!”

உடையவர் உள்ள நிறைவோடு இரு சீடர்களுடனும் திருவரங்கத்திற்குத் திரும்பினர். சிறிது தூரம் நடந்ததுமே, உடையவரின் பெருமிதம் கருணையின் சிகரமாக மாறியது. 'இந்த அரிய பொக்கிஷத்தை நான் மட்டுமா வைத்துக் கொள்வது? நல்லதைப் பொதுப் பொருளாக்கி எல்லாரும் பயனடையப் பயன் படுத்துவதுதானே பண்புடைமை?' இந்த எண்ணம் உறுதிப்பட்டது.

உடனே, ராமாநுஜர் திருக்கோட்டியூரிலுள்ள திருமாலின் தேவாலயத்திற்குச் சென்றார். போகிற வழியில் தென்பட்ட மக்களிடமெல்லாம், ''மகா ஜனங்களே ! எல்லாரும் குழுமி, கோயிலுக்கு வந்து சேருங்கள். உங்கள் பிறவி புனிதமடைந்து, மேன்மை பெறும் தாரக மந்திரத்தை உங்களுக்கு உபதேசிக்கிறேன். அதைத் தினமும் சொல்லித் தியானம் செய்து வந்தால், உங்களுக்கு நாரணனின் திருவருள் நிச்சயம் கிட்டும். இப்போதே வாருங்கள் ! எதிர்ப்பட்டவர்களை யெல்லாம் அழைத்து வாருங்கள் !'' என்று உரக்க அறிவித்துக் கொண்டே சென்றார். கூரத்தாழ்வாரும் முதலியாண்டானும் பிரமித்துப் போனார்கள். இவ்வளவு கஷ்டப்பட்டுப் பெற்ற அரிய ரகசியத்தை இப்படிப் பொதுச்சரக்கு மாதிரி எளிதில் வழங்க முனைந்து விட்டாரே ! குருவின் சாபத்திற்கு இலக்காக வேண்டிவருமே !' என்று கவலையும் கொண்டார்கள்.

உடையவர் கோயிலின் கோபுரத்தில் ஏறி அமர்ந்து கொண்டார். முகத்தில் திருவின் பொலிவு; கண்களில் அன்பின் ஒளி; தோற்றத்தில் மகா

புருஷருக்கே உரிய புனிதமான கவர்ச்சி; பேச்சிலோ ஆட்கொள்ளும் அருட் சக்தி! காந்தத்தால் ஈர்க்கப் படும் ஊசிகளைப் போல் ஊர்ப்பெருமக்கள் கோயி லுக்கெதிரில் வந்து குழுமினுர்கள்.

எதிராசர் கோஷ்டி பூரணரிடம் பதினெட்டுத் தடவைகள் நடந்தும் பெறமுடியாத அரிய தாரக மந்திரத்தை, ஊர்ப்பெருமக்கள் வலிய அழைக்கப் பட்டு உபதேசம் பெற்ருர்கள்! எதிராசர் திருமந்தி ரத்தை மூன்று முறை உரக்கக் கோஷித்தார். குழுமி யிருந்த மக்கள் அதைத் திரும்ப உச்சரித்து, மனப் பாடம் செய்து கொண்டார்கள். ராமாநுஜரின் கருணை நோக்கும், தெய்விகமான திருவாக்கும் அவர் களுடைய சிந்தையில் பதிந்து விட்டன. எல்லா ருடைய நாவுகளும் அந்தத் தாரக மந்திரத்தையே உள்ளொலியும் புற ஒலியுமாக உச்சரித்துக் கொண்டே இருந்தன.

"ஆஹா! தேவ தேவா! உன் எளிய மக்கள் இனி உலக வாழ்வின் நரகச் சுழலில் உழன்றிருக்காமல், பக்தியும் சக்தியும் முக்தியும் தரவல்ல உன் திருவடி களையே புகலாகப் பெறுவார்கள். பண்பின் உயர் நிலையை இனி இவர்கள் அடைவார்கள்," என்று மகிழ்ச்சிப் பரவசத்தோடு கூவினுர். கூடவே, பூரண ரின் உபதேசத்தால் அரிய தெய்விக சக்தியை உணர்ந்து கொள்ள உதவிய அந்தத் திருமந் திரத்தை — திருமகளுடன் கூடிய நாராயணனின் பாதங்களைப் புகலாகக் கொள்ளுகிறேன்; திருவுடன் சேர்ந்த நாராயணனை வணங்குகிறேன்!—எனும் தாரக மந்திரத்தை பன்முறை சொல்லிக் கொண்டார்.

கூரத்தாழ்வாரும், முதலியாண்டானும் ஆசாரியரின் கருணை உள்ளத்தைக் கண்டு பெருமிதம் கொண்டார்கள். ஜயகோஷம் செய்தார்கள். வாழ்த்தினார்கள். ஆனந்தக் கூத்தாடினார்கள். இதே உவகை நிலையில்தான் குழுமியிருந்த பெருமக்களும் திளைத்தார்கள். கார்முகில்கள் தன்னலம் கருதாது, பாடுபட்டுக் கொணர்ந்த நீரை உயிரினம் வாழ எங்கும் பொழிவது போல், எதிராசர் தாம் வருந்திப்பெற்ற அரிய திருமந்திரப் பொருளைப் பலருக்கும் வலியவே வழங்கியதை நினைந்து நினைந்து பெருமிதப்பட்டனர். அதன் எதிரொலியாக வாழ்த்தினார்கள்—

"காரேய் கருணை இராமாநுசா! இக் கடலிடத்தில்
ஆரே யறிபவர் நின் அருளின் தன்மை?"

"உயிர்களெல்லாம் உய்தற்கு உதவும்
இராமாநுசன் எம் உறுதுணையே!"

"பேதமை தீர்த்த ராமாநுசன்!"

"கருணைக் கடலே எதிராசா!"

உடையவரோ, பெரும் பணிபுரிந்த மனத் திருப்தியோடு மக்களோடு மக்களாகக் கலந்து, திருமந்திர நாதத்தில் மிதந்துகொண்டிருந்தார்.

பூரணரின் சீடர் ராமாநுஜரைக் கைப் பிடித்து அழைத்துச் சென்றார்; பூரணரின் ஆணை அது. எதிரே பூரணர் சினத்துடன் நிற்பதைக்கூட சரியாகக் கவனிக்கவில்லை; திருப்தியின் அகமகிழ்வில் லயித்திருந்த எதிராசரை, குருவின் கோபக்குரல் சுயநிலைக்கு இழுத்து வந்தது:

"சுவாமி! குருத்துரோகத்திற்கு என்ன தண்டனை தெரியுமா?"

உடையவர் கைகூப்பி, பணிவோடு, "ஞான குருவே, மன்னித்தருள வேணும். குருத்துரோகிக்குக் கொடிய நரக தண்டனைதான் கிடைக்கும் என்பதை அடியேன் மறக்கவில்லை," என்றார்.

"அறிந்துமா இப்படியொரு பிழை செய்தீர்?"

"நான் ஒருவன் நரகத்தில் உழல்வதால் குறைவு ஏற்பட்டுவிடாது; அஞ்ஞான இருளில் உழன்று பேதை வாழ்வு வாழ்ந்துவரும் பல்லாயிரம் மக்கள் நற்கதி அடைகிறார்களே, இதுதான் சிறந்த திருத்தொண்டு. இந்த ஆத்ம திருப்தி என்னை எல்லாப் பிறவிகளிலும் பெருமைப்படுத்திவரும். என் இரக்க உணர்ச்சி இவ்வளவு ஜனங்களும் உலக மாயையில் உழன்று பரிதவிப்பதைப் பார்த்துக் கொண்டிருக்க விடவில்லை. நான் செய்தது பிழையேயானாலும் பொறுத்தருள வேண்டும், சுவாமி!" என்று கூறி, பூரணரின் திருவடிகளில் பணிந்து வணங்கினார்.

கோஷ்டி பூரணரின் அகம் மகிழ்ந்து விம்மிதமடைந்தது. உடையவரை அப்படியே வாரி அணைத்துக்கொண்டார். "எம்பெருமானாரே! உங்களுக்கு உள்ள கருணை உள்ளம் எனக்கு இல்லையே! சர்வேச்வரனான நாராயணனின் சீர்மையைச் செயலில் காட்டிய கருணைக் கடல் நீங்கள். நம் பரமாசாரியரான ஆளவந்தாரின் திருவுள்ளத்தை அறிந்த ஞானி நீங்கள் தான். இனி நமது ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாயம் சிறப்பும் பெருக்கமும் பெறும். நீங்கள் நீடூழிவாழ வேண்டும்!" என்று வாழ்த்தினார்.

அன்று முதல், எதிராசருக்கு எம்பெருமானுர் எனும் திருப்பெயர் நிலைத்தது. பூரணர் தம் புதல்வர் சௌம்ய நாராயணரை எம்பெருமானுரிடம் சீடராக்கி, அவருடனே தங்கித் தொண்டு புரிந்துவருமாறு பணித்தார். திருமந்திர வெளியீட்டால் ஆயிரமாயிரம் பக்தர்கள் எதிராசருக்கும் வைணவத்திற்கும் வந்து சேர்ந்தார்கள்.

எம்பெருமானுரின் புகழ் மேலும் பரவியது.

## திருத்தொண்டு

எதிராசர் மக்களுக்கு நல்வழிகாட்ட, திருமால் வழிபாட்டை நாடெங்கும் பரப்ப ஏற்பாடு செய்தார். அத் திருத் தொண்டிற்குப் பல துணைவர்களின் தேவை ஏற்பட்டது. ஆயிரக் கணக்கான சீடர்களில், தகுதியும் திறமையும் தயாள குணமும் நிரம்பியவர்களைப் பொறுக்கி யெடுத்து பல இடங்களுக்கும் அனுப்பிவந்தார். அவர்கள் சென்ற இடங்களிலெல்லாம் ஆழ்வார்களின் பக்திப்பாக்களைப் பரப்பினுர்கள்.

நாராயணனே நமக்குப் புகல்; அவன் திருப்பெயர் ஓதுவதே நம் அறநெறி; அவனடியார்களுக்குத் தொண்டு புரிவதே நம் பிறவிப் பயன். இன்னலில் இடர்ப்படுபவர்களுக்கு முன்வந்து உதவுவதே பண்புடைமை; குல ஆசாரங்களைக் கைவிடாமல், வைணவ சமுதாயம் என்ற வகையில் எல்லா வகுப்

பாரும் இணைந்து பழகி, உற்றவர்களாகி, சமூக நெறி முறைகளைச் செம்மைப்படுத்த வேண்டும். நாராண னைப் போற்றும் பக்தர்களைவிட, அப்பக்தர்களைப் போற்றிவரும் பாகவதர்களுக்குப் பெருமை அதிகம். வைணவத் திருக்கோயில்களில் அடிக்கடி உற்சவத் திருவிழாக்களை விமரிசையாகக் கொண்டாட வேண் டும்; மக்களின் மனம் பக்திவழியில் பற்றுடன் ஈடு பட இதுவே சாலச்சிறந்த சாதனம். பேதம்-பிரிவு இல்லாமல் சகலரும் உற்சவ காலங்களில் கூடி இருந்து நாரணனைப் போற்றி வழிபட வேண்டும். நாடெங்கும் நாரணனுக்குக் கோயில்களை எழுப்பி, திருவாராதனம், உற்சவங்கள் யாவும் தொடர்ந்து நடத்த வகை செய்ய வேண்டும். மகான்களான வைணவ ஆசாரியர்கள் வகுத்துத்தந்த நெறி முறை களைக் கடைப்பிடித்து வாழ்க்கை நடத்துவதே மேன்மை தரும்; இதுவே நல்வாழ்வாகும்.

இதே குறிக்கோள்களை வைணவத் திருத்தொண் டர்கள் நாடெங்கும் பரப்பி வந்தார். அவர்களுக் (கெல்லாம் எதிராசர் தக்க பயிற்சி அளித்ததோடு, அவ்வப்போது கண்காணிப்புடன் ஊக்கமளித்து வந் தார்.

"பெற்ற தாயினும் ஆயின செய்யும்,
நலம் தரும் சொல்லை
நான் கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம்!"

திருமங்கையாழ்வார்

"நாராயணனே நமக்கே பறை தருவான்"

ஆண்டாள்

"அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக,
இன்புருகு சிந்தை யிடுதிரியா,—நன்புருகி
ஞானச்சுடர்விளக் கேற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ் புரிந்த நான்"

பூதத்தாழ்வார்

"ஓராயிரமாய் உலகேழு அளிக்கும்
பேராயிரம் கொண்டதோர் பீடுடையன்,
காராயின காள நன் மேனியினன்
நாராயணன் நங்கள் பிரானவனே!"

நம்மாழ்வார்

"நாமம் பல சொல்லி நாராயணு வென்று,
நாம் அங்கையால் தொழுதும்!"

பேயாழ்வார்

"நன்ருக நான் உன்னையன்றி இலேன் கண்டாய்,
நாராயணனே! நீ என்னை இன்றி இலே."

திருமழிசை யாழ்வார்

"நாடும் நகரமும் நன்கு அறிய
நமோ நாராயணுய என்று,
பாடுமனமுடைப் பத்தருள்ளீர்!
வந்து பல்லாண்டு கூறுமினே."

பெரியாழ்வார்

இதே தைவ நம்பிக்கையை ராமநுஜர் பரப்பிஞர், இத்தகைய ஆழ்வார்களின் பாசுரங்களை வீடு தோறும் ஓதவைத்தார். அவரது சித்தையில் எப்போதும் நாரணனைக் காட்டிய அத் தமிழ் மறை தான் ஒலித்துக் கொண்டிருந்தது. ராமாநுஜர் ஸ்ரீவர ரங்கர் எனும் பெரும் புலவரிடம் நாலாயிர திவ்ய பிரபந்தத்தை விளக்கமாகப் பயின்ருர். இதே போல், மாலாதரர் எனும் முதிய வித்வானிடம் நம்மாழ்வாரின் திருவாய் மொழியை சிறப்புப் பொருள்

விளக்கங்களோடு கற்றுணர்ந்தார். இருவரும் ஆள வந்தாரின் பிரதான சீடர்கள். இவ்வாறு, ஆளவந் தாரின் அந்தரங்க சீடர்களிடமெல்லாம் தாம் சீட ராகி, ஆளவந்தார் அவர்களுக்கு உபதேசித்திருந்த தலைசிறந்த தத்துவங்களை யெல்லாம் ராமாநுஜர் ப யின்றூர்.

அரங்கநாதர் ஆலயத்தின் நிர்வாகத்தை வைண வப் பெருமக்களின் வேண்டுகோளுக்கு இணங்கி, உடையவரே ஏற்றுக்கொண்டார். முன்பு நிர்வாக அதிகாரியாக இருந்தவருக்குப் பொறுமையும் பகை மையும் எதிராசர்பால் ஏற்பட்டன. எப்படியாவது ரர்மாநுஜரைக் கொன்றுவிட வேண்டுமென்று சதி செய்தார்.

உடையவர் தினமும் குறிப்பிட்ட ஏழு வைண வர்களின் இல்லங்களுள் ஒன்றுக்குச் சென்று பிக்ஷை ஏற்று, அதைக்கொண்டே பசியாறுவார். துறவிக்கு உரிய நெறி இது. முன்னுள் கோயில் அதிகாரி ஒரு வைணவருக்குப் பொருளாசை காட்டி ராமாநுஜ ருக்கு இடும் பிக்ஷையில் நஞ்சு கலந்து கொடுத்து விடுமாறு தூண்டினுர். விதிவசத்தால் அந்த மனி தரும் இந்தப் பாதகத்திற்கு இசைந்தார். தம் மனைவியை அவ்வாறு செய்ய வற்புறுத்தினுர். அந்த அம்மணியோ உத்தமி. கணவரைப் புறக்கணிக்க வும் முடியவில்லை; பாதகம் செய்யவும் மனம் வர வில்லை. குழம்பிய மனத்துடன் தவித்துக் கொண்டி ருக்கும்போது, உடையவர் பிக்ஷைக்கு வந்து சேர்ந் தார். அந்த அம்மாள் பிக்ஷையை இட்டுவிட்டு,

அவர் திருப்பாதங்களைப் பற்றி வணங்கினுள். பிக்ஷை இடுபவள் தாய்க்குச் சமானமானவள். இவ்வாறு வணங்குவது முறைமை இல்லை. வழக்கமில்லாததை அன்று செய்ததால், உடையவர் குறிப்பறிந்து கொண்டார். அந்த அம்மாளின் கலங்கியிருந்த கண்களும் முகத்தில் கலவரக் குறியும் கண்டு நிலைமையை ஓரளவு புரிந்து கொண்டார். அன்று ராமாநுஜர் உணவே கொள்ளவில்லை. மறுநாளும் அவர் பிக்ஷைக்குப் போகவில்லை. பிக்ஷையில் நஞ்சு கலந்திருந்தது சீடர்களுக்குத் தெரிந்து விட்டது. செய்தி பரவியது. இதையறிந்து கோஷ்டி பூரணர் மனம் பதைத்து விரைந்து வந்தார்.

ராமாநுஜர் தம் ஞான குருவான பூரணரை எதிர் கொண்டழைக்க சீடர்களுடன் கொள்ளிட நதியைக் கடந்து சென்முர். கோடைக் காலத்துக் கடும் வெயில். நதியில் மணல்பரப்பே விரிந்திருந்தது. அந்த மணலில் பூரணர் வந்து நின்முர். உடையவர் குருவைத் தண்டனிட்டு வணங்கினர். பூரணர் உடையவரை "போதும்; எழுந்திரும்" என்று சொல்ல வில்லை. கண்களை மூடியவாறு நின்று விட்டார் பூரணர். கொதிமணலின் வெப்பம் தகித்துக் கொண்டிருந்தது. சீடர்கள் செய்வதறியாது தவிப்புடன் நின்முர்கள்.

ஒரு சீடருக்கு மட்டும் நெஞ்சு பொறுக்கவில்லை. பூரணரைப் பார்த்து, "சுவாமி! உமது நெஞ்சு ஈவு இரக்கமற்றது. மென்மை மேனி படைத்த எங்கள் எம்பெருமானுர் இதோ கொதி மணலில் வெந்து போகிருரே; உமக்குக் கண் இல்லையா?" என்று

ஆத்திரத்துடன் சினந்து கொண்டு, தாமே மணலில் படுத்து, உடையவரின் துவண்ட திருமேனியைத் தமது உடல் மேல் கிடத்திக் கொண்டார்.

கண்களைத் திறந்த பூரணர் உவகையுடன், "இத்தகைய சீடன் ஒருவனுக்காகத்தான் இவ்வளவு நேரமும் காத்திருந்தேன். வைணவத்தின் மேன்மைக் கென்றே வந்து பிறந்துள்ள இந்த மகானின் உடலைப் பேணி வளர்க்க ஓர் உறுதுணை தேவை. இன்று முதல், இவருக்குத் தினமும் பிக்ஷை அளிக்கும் பேறு உமக்கு மட்டுமே உரியது'' என்று பணித்தார்.

கிடாம்பி ஆச்சான் எனும் அந்த உத்தம சீடரின் பாக்கியமே பாக்கியம்!

யக்ஞ மூர்த்தி எனும் தலைசிறந்த தருக்க சாத்திர வித்துவான் ராமாநுஜரை வாதுக்கு அழைத்தார். பதினெட்டு தினங்கள் இருவருக்கும் தருக்க வாதம் நிகழ்ந்தது. தோற்கும் தருவாயில் இருந்த உடையவர் ஸ்ரீ ஆளவந்தாரின் 'மாயாவாத கண்டனம்' எனும் நூலைத் துணைகொண்டு யக்ஞ மூர்த்தியைத் தோற்கடித்து விட்டார். எதிராசரின் மேதாவிலாசத்தையும், பண்பு பிறழாத பேச்சையும், அன்பு கனிந்த இயல்பையும், தெய்விகம் பொலிவுறும் திருமுகத்தையும் கண்டு செருக்கொழிந்த யக்ஞ மூர்த்தி, வைணவத்தை விரும்பி ஏற்றார். ராமாநுஜரின் உற்ற சீடரானார். ஆசாரியரின் ஆணையை ஏற்று, ஞானசாரம், பிரமேயசாரம் எனும் இரு வைணவ தத்துவ விளக்க நூல்களைத் தமிழில் இயற்றித் தந்தார்.

இவருக்குத் தேவராஜ முனி எனும் சிறப்புப் பெயரைச் சூட்டிக் கௌரவித்தார் எதிராசர்.

பிறகு உடையவர் திருப்பதி யாத்திரையை மேற்கொண்டார். வழியில் தங்கும் ஊர்களிலெல்லாம் மக்கள் அவரைப் பேராதரவுடன் வரவேற்ருர்கள். அவரிடம் உபதேசம் பெற்று, வைணவத்தை மேற்கொண்டார்கள். திருப்பதியில் திருமலைநம்பி, தம் தம்பி கோவிந்தர் ஆகியவர்களைச் சந்தித்தார். திருமலை (திருப்பதி) யில் கோயில் கொண்டிருக்கும் திருவேங்கடமுடையானைத் தரிசித்துப் பரவசமானுர். உடையவர் தம் வெகுநாளைய ஆவலின்படி, திருமலை நம்பிகளிடம் ஆதி மகாகாவியமான ராமாயணத்தை முழுவதும் பாடங்கேட்டார்.

எதிராசர் ஓராண்டு காலம் திருப்பதியில் தங்கியிருந்து, ஆந்திர—கர்நாடக நாடுகளில் வைணவம் தழைத்துப் பரவ வகை செய்தார். பல உத்தம சீடர்களை ஊர் ஊராகத் தர்மயாத்திரை செய்வித்து, ஆழ்வார்களின் தூய சரிதங்களையும் இனிய பாக்களையும் மக்களிடையே பரப்பச் செய்தார். கோவிந்தருக்கு எம்பார் என்று செல்லப் பெயர் சூட்டி, அவர் மூலமாக அநேக அன்பர்களுக்குத் திருமந்திர தீட்சை செய்வித்து, வைணவ சமுதாயத்தைப் பெருக்கி வந்தார். பல நாட்டு மக்களும் வந்து போகும் பெரும் திருத்தலமானதால், திருப்பதியில் ராமானுஜரின் சீரிய திருத்தொண்டு சிறப்பாகப் பரவியது. அங்கு தான், கர்நாடக தேசத்து மன்னன் விட்டல தேவன் (பிட்டி தேவன்) வைணவத்தை மேற்

கொண்டு, உடையவரின் சீடனுனன். ஆசாரியர் அவனுக்கு விஷ்ணுவர்த்தனன் என்று பெயர் சூட்டினுர். அவனது அழைப்பை ஏற்று, திருநாராயணபுரம் (மைசூர் மாநிலம்) முதலிய திருத்தலங்களுக்கு வருவதாக வாக்களித்தார். அந்த மன்னன் உவந்தளித்த ஏராளமான செல்வங்களை உடையவர் ஏழை மக்களுக்குப் பகிர்ந்தளித்தார். பிறகுதிருவரங்கம் வந்து சேர்ந்தார்.

ஒரு சமயம், உறையூரைச் சேர்ந்த உறங்காவில்லி எனும் வாலிபன் தன் அழகிய மனைவியின் கண் அழகிலும் மேனிக்கவர்ச்சியிலும் மயங்கி, அவளையே போற்றிக் கொண்டிருந்தான். அவனுக்குத் தனுர்தாசன் என்றும் பெயர். எதிராசர் அவனைத் திருத்தி உயரிய விஷ்ணுபக்தனுக மாற்றினுர். கள்ளம் கவடு இல்லாமல் நேசிக்கப் பழகிய அவனது உள்ளத்தில் தெய்வக் காதலும் குருபக்தியும் முதிர்ச்சியடைந்து 'பரம பாகவதன்' என்று பெரியோரும் போற்றும் வகையில் சிறந்திருந்தான் உறங்காவில்லி. மேல் குலத்தவனுக இல்லாதிருந்தும் உடையவர் உறங்காவில்லியிடம் அதிகப் பரிவு கொண்டிருந்தார். பக்தர்களிடையே உயர்வு தாழ்வு கிடையாது என்பதைக் காட்டுவதற்காக, உடையவர் தினமும் காலையில் காவிரியில் நீராடி விட்டுத் திரும்பும்போது உறங்காவில்லியின் கையைப் பிடித்துக் கொண்டு மடத்திற்குத் திரும்புவார். இதைச் சில உயர் குலத்துச் சீடர்கள் உள்ளூற ஆட்சேபித்தார்கள். தனுர்தாசரின் சிறந்த பக்தியை அவர்களுக்கு மெய்ப்பித்துக் காட்டி, இவ்வாறு உபதேசமும் செய்தார்.

''உலகில் நலம் தோன்றுவது சாதியினுல் அல்ல. நற்பண்புகளாலும், நல்ல சிந்தனையாலும், தூய நடத்தையாலுமே மனிதர் மேன்மை அடைகிருர். ஆகவே, யாரும் இனம் பற்றிய கர்வத்தையொழித்து விட்டு, நற்சீலம் பெறவே பாடுபட வேண்டும். பிறப்பினுல் உயர்வு மனப்பான்மை கொண்டு, கர்வப்படுபவனுக்கு எதிரிகள் எளிதில் ஏற்பட்டு விடுவார்கள். அவ்வாறு இல்லாத பண்பாளர்களுக்கு யாவருமே உற்றவர்களாக இருப்பார்கள். அவர்களால் மனித சமுதாயம் நன்மையே பெறும்.''

அன்று முதல் வைணவ சமுதாயத்தில் சம நோக்கு வளர்ந்தது. வைணவத்தின் வளர்ச்சிக்கே அதுதான் ஆக்கமளித்தது. இதற்குப் பல சான்றுகள் ராமாநுஜரின் வாழ்க்கையில் காணக் கிடைக்கும்.

மற்ருெரு சமயம், உடையவரின் போதகாசாரியர் பெரியநம்பிகளுக்கு மாரநேர் நம்பி எனும் கீழ்க்குலத்துப் பக்தர் ஒருவர் இருந்தார். அவர் உற்ருர், உறவினர் எவரும் இல்லாதவர். 'எமக்கு எல்லாம் எம்பெருமானுரே!' என்று எதிராசரையே புகலடைந்த வைணவர். முதுமையால் அவர் நோயில் கிடந்தார். பெரியநம்பிகள் அவருக்கு வேண்டிய பணிவிடைகளைப் புரிந்து வந்தார். சில நாட்களில் அவர் விண்ணுலகு எய்திஞர். குலத்தால் தாழ்ந்தவராஞலும், அவருக்கு உரிய ஈமக் கடன்களை உயர் குலத்தவரான பெரிய நம்பிகளே

முன்வந்து செய்தார். இதை அறிந்து ராமாநுசர், நம்பிகளை வணங்கி, "இத்தகைய புனிதமான தொண்டை எனக்கு அளிக்கக்கூடாதா? அந்தப் பாக்கியம் இந்த எளியவனுக்குக் கிடைக்கக் கூடாதா?" என்று முறையிட்டார்.

எதிராசரின் கருணையையும் பரந்த மனப்பாங்கையும் கண்டு, பரவசமடைந்தார் பெரிய நம்பிகள்.

## இலட்சிய சாதனை

உடையவர் தம் ஆசாரியர் ஸ்ரீ ஆளவந்தாருக்கு அளித்த வாக்குறுதியை நிறைவேற்ற முனைந்தார். முதல் பிரதிக்கினைப்படி, வைணவத்தையும், வைணவ பக்த கவிகளான ஆழ்வார்களின் பாசுரங்களையும் பரப்பி வந்தார். திவ்யப் பிரபந்தம், திராவிட வேதம் ஆழ்வார்களின் அருளிச் செயல் என்றெல்லாம் சிறப்புப் பெயர்களை வழங்கி, அந்தப் பக்திப் பாக்களின் மதிப்பை உயர்த்தினர்.

குறிப்பாக, நம்மாழ்வாரின் பாடல்களான திருவாய் மொழிக்கு, திருக்குருகைப் பிள்ளான் எனும் வைணவப் புலவரைக் கொண்டு, ஆருயிரப்படி எனும் சிறப்பான விளக்கவுரை எழுதுவித்தார்.

இரண்டாவது பிரதிக்கினையை நிறைவேற்ற கூரத்தாழ்வாருடன் முனைந்தார். வியாசர் இயற்றிய பிரும்ம சூத்திரங்களுக்கு வைணவச் சார்புள்ளதாக விளக்கவுரை இயற்ற முற்பட்டார். அதற்

குத் துணே நூலாக போதாயன முனிவர் இயற்றிய ஒரு வடமொழி நூல் தேவைப்பட்டது. அது காச்மீர தேசத்தில் ஒரு நூல் நிலேயத்தில் மட்டுமே இருந்தது. அதைப் பயின்று வர, எதிராசரும் கூரத்தாழ்வாரும் காச்மீரம் சென்ருர்கள். ராமாநுஜர் அங்குள்ள சாத்திர விற்பன்னர்களுக்கு வைணவ தத்துவத்தை விளக்கினுர். உடையவருடைய மேதாவிலாசத்தைக் கண்டு அங்குள்ளவர்கள் மகிழ்ந்து போற்றினுர்கள். 'போதாயனவிருத்தி' எனும் அந்த அரிய நூலே ஒரு முறை அங்கேயே படிக்க மட்டுமே கொடுத்தார்கள். கூரத்தாழ்வார் அந்த நூலே அப்படியே மனப்பாடம் செய்துகொண்டார்; ராமாநுஜர் நூலின் பொருளே ஆராய்ந்து உணர்ந்து கொண்டார். இருவரும் திருவரங்கத்திற்குத் திரும்பினுர்கள். வழியில், காசிமா நகரிலும் தங்கி, வைணவ சம்பிரதாயத்தை விளக்கி, பல வித்துவான்களே வைணவத் திருத் தொண்டர்களாக்கினுர். இவ்வாறு, வழியில் பல நகரங்களிலும் தர்மபிரசாரம் செய்து திருமால் வழிபாட்டைச் சிறப்பான சம்பிரதாயமாக்கி வந்தார். திருவரங்கம் வந்து சேர்ந்ததும், கூரத்தாழ்வாரின் துணேகொண்டு, பிரும்ம சூத்திரங்களுக்கு விளக்கவுரையான ஸ்ரீபாஷ்யம் எனும் பெரு நூலே வடமொழியில் இயற்றினுர். உடையவர் சொல்ல, அவைகளேத் திருத்தமாக ஓலேச் சுவடியில் விரைவாக எழுதித்தந்தார் கூரத்தாழ்வார். 'தியானம், உபாசனே, பக்தி, பூஜை ஆகியவை மூலமே முக்தி அடைய முடியும். ஜீவாத்மாவும் பரமாத்மாவும் முளேயும் விதையும் போல் தொடர்பு

கொண்டதாக இருந்தாலும், இரண்டும் ஒன்றாகி விடாது. வெவ்வேறாகவே பிரிந்தும், இணைந்துமே இருந்துவரும்,'' ஆகிய வைணவ தத்துவங்களை அந்த உரை நூலில் விளக்கியிருந்தார். உள்ளுணர்வை அப்படியே பிரபலிக்கும் திறனையும், உண்மையைத் தெளிவு படுத்திய சிறப்பையும் இந்த உரை நூலில் கண்டார்கள்.

மேலும், உடையவர், வடமொழியில் வேதாந்த தீபம், வேதாந்த சாரம், கீதார்த்த சங்கிரகம், கீதாபாஷ்யம், எனும் தத்துவ விளக்க நூல்களையும் கத்யத்ரயம் எனும் துதி நூலையும் இயற்றினர். கல்வியில் சிறந்த பெரியோர்களால் அவை மிகவும் போற்றப் பட்டன. இன்றும் அவை வைணவப் பெருமக்களுக்குப் புனிதமான தர்ம கிரந்தங்களாக விளங்கிவருகின்றன.

கூரத்தாழ்வாருக்கு, எம்பெருமானரின் அருளாசியால் இரு புதல்வர்கள் பிறந்தார்கள். மூத்த புதல்வருக்குப் பராசர பட்டர் என்றும், இளையவருக்கு ஸ்ரீராமர் என்றும் உடையவரே பெயர் சூட்டினர். எம்பார் மூலமாகப் பராசர பட்டருக்கு இளம் பிராயத்திலேயே திருமந்திர உபதேசம் செய்வித்தார். பராசரர் மகான்களின் ஆசியால் பெரும் மேதையாகத் திகழ்ந்தார். எம்பார் முதலிய முதிய ஆன்றோர்களிடம் பராசரர் வைணவ நூல்களை முறையாகப் பயின்றார். ''பிற்காலத்தில், நமது கனவுகளை நனவாக்கப் போகும் ஆசாரியர் இவர்'' என்று பராசர பட்டரைப் பாராட்டி வந்தார் உடையவர். ஆளவந்தாருக்கு அவர் அளித்த மூன்றாவது பிரதிக்கினையையும்— ''விஷ்ணுபுராணம் இயற்றிய பராசர

முனிவரின் வாரிசாக ஓர் ஆசாரியரைத் தோற்று விப்பேன்'' எனும் வாக்கையும்— இதன் மூலமாக நிறைவேற்றி வைத்தார். ராமாநுஜருக்குப் பிறகு எம்பார் சிறிது காலம் ஆசாரிய பதவியை ஏற்ருர். அதன் பிறகு, அப்பதவியை மேலும் பெருமைப் படுத்தியவர் பராசர பட்டர்.

எதிராசர் ஆந்திரம், கர்நாடகம் ஆகிய மாநிலங் களில் தர்மயாத்திரை செய்வதற்காகக் கிளம்பினர். அவருடன் எம்பார், முதலியாண்டான், உறங்கா வில்லி முதலிய அந்தரங்க சீடர்களும் சென்ருர்கள். வழியெங்கும் பல பக்தர்களைத் திருமால் திருத் தொண்டர்களாக்கி வைணவத்தைப் பரப்பிக் கொண்டு சென்ருர் உடையவர்.

சாளக்கிராமம் எனும் ஆந்திர நாட்டு நகரில் இருந்த வடுக நம்பி, எதிராசரையே தெய்வமாகக் கருதி அவருக்குத் தொண்டு புரிய வந்து சேர்ந்தார். அவரையும் அழைத்துக்கொண்டு கர்நாடக தேசத் திற்குச் சென்ருர். அங்கு ஆட்சி புரிந்துவந்த பிட்டி தேவன் உடையவரை எதிர்கொண்டழைத்து, உப சரித்தான். அவருடைய வைணவ மதப் பிரசங்கங் களைக் கேட்டு மகிழ்ந்தான். பல இடங்களிலும் அவைகளை நிகழ்த்த வசதி செய்து கொடுத்தான். ஏராளமான பக்தர்கள் வைணவத்தை மேற்கொண் டார்கள். இந்த அரசன் முன்பே திருப்பதியில், உடையவரின் மகிமை யறிந்து, அவரிடம் உபதேசம் பெற்று, வைணவத்தை மேற்கொண்டு, விஷ்ணு வர்த்தனன் என்ற பெயரும் பெற்றிருந்தான். உடை யவர் தொண்டனூருக்கருகில் சிறந்த திருமால் ஆல

யத்தைக் கட்டுவித்து அதற்குத் திருநாராயணபுரம் என்று பெயர் சூட்டினர். அப்பகுதியில் தண்ணீர் பஞ்சம் இருந்தது. அதைப் போக்க 'திருமலேச் சாக்ரம்' எனும் பெரும் ஏரியை வெட்டுவித்தார். பேலூரில் விஜய நாராயணர் தேவாலயத்தைக் கட்டுவித்தார். இன்றும், சிற்பக்கலேக்கும் திருமால் வழிபாட்டுக்கும் ஒப்பற்ற கேந்திரமாக விளங்கி வரு கின்றன அந்தத் தேவாலயங்கள்.

உடையவர் சீடர்களுடன் பாண்டி நாட்டிற்கு வந்து சேர்ந்தார். ஆழ்வார்களால் பாடித் துதிக் கப்பெற்ற 'திவ்ய தேச'ங்களே (வைணவத் திருத் தலங்களே) யெல்லாம் தரிசித்துக்கொண்டு, திருமா லிருஞ் சோலேக்கு (மதுரைக்கருகில் உள்ளது) வந்து சேர்ந்தார். அங்கு கோயில் கொண்டிருக்கும் அழ கருக்கு முன்பு ஆண்டாள், "திருமாலிருஞ்சோலே நம் பிக்கு நான் நூறு தடா (பாத்திர அளவு) நிறைந்த அக்கார அடிசில் (படைப்பேனென்று) சொன் னேன்" என்று வேண்டிக்கொண்டு பாடியிருப் பதை நிறைவேற்றி வைத்தார். அழகருக்கு நூறு தடா அக்கார அடிசில் அமுதுசெய்வித்தார். உடைய வருக்கு ஆண்டாளின் தீஞ்சுவைப் பாக்களில் அதிக ஈடுபாடு. மெய்மறந்து அப்பாக்களேப் பாடி உருகு வார். தினமும் விடிகாலேயில் திருப்பாவையைப் பாடி விட்டுத்தான், மற்றக் காரியங்களேத் தொடங்குவார். இதனுலேயே எதிராசருக்குத் திருப்பாவை ஜீயர் எனும் சிறப்புப் பெயரும் வழங்கி வந்தது.

தில்லேநகரில் திருமால் சன்னிதியான சித்ர கூடமும், சிவபிரானின் சன்னிதியான கூத்தம்பலமும்

இணைந்திருந்தன. இரண்டாம் குலோத்துங்கன் அந்த ஆலயத்தைப் புதுப்பிக்க முனைந்தான். கூத்தம் பலத்தை மட்டும் செப்பனிட்டு, விரிவு படுத்தி, மேல் விதானத்திற்குப் பொன் வேய்ந்து'சிறப்பாகத் திருப்பணி செய்தான். அணித்தாக இருந்த சித்திர கூடத்தை ஒதுக்கி விட்டதோடு, அங்கு கோயில் கொண்டிருந்த கோவிந்தராசப் பெருமாளைக் கட லில் கிடத்திவிடவும் ஆணையிட்டான். இதை அறிந்த உடையவர் மிகவும் மனம் வருந்தினர். கடலிலிருந்து அத் திருமால் மூர்த்தத்தை எடுக்கச் செய்து திருப்பதிக்கு எடுத்துவரச் செய்தார். அங்கு பெரிய ஆலயத்தைக் கட்டுவித்து, அதில் கோவிந்த ராசப் பெருமாளைப் பிரதிட்டை செய்தார். அங்கு ஆண்டாள், ஆழ்வார்கள் ஆகியவருக்குச் சன்னிதி கள் ஏற்படுத்தி, அப்பகுதியையே சிறந்த வைணவத் திருப்பதியாக்கினர். கீழத்திருப்பதியில் அந்த ஆல யம் அமைந்தது. இன்றும் அப்பகுதிக்கு இராமாநுச புரம் என்றே புகழ்ப் பெயர் வழங்குகிறது. இவ்வாறு, பன்னிரண்டு ஆண்டுக்காலம் நாடெங்கும் தர்மயாத் திரை புரிந்து வைணவத்தைப் பரப்பி வந்தார் ராமாநுஜர்.

உடையவர், தூய்மையும் அன்பும் பண்பும் எவ ரிடமிருந்தாலும், அவரைக் கௌரவிக்கத் தயங்கி யதே இல்லை. இனப்பாகுபாடோ, செல்வம், பதவி, கல்வி ஆகியவைகளின் ஏற்றத்தாழ்வுகளோ எதிராச ரைக் கட்டுப் படுத்தியதே கிடையாது. எல்லாரும் உய்வுபெற திவ்விய பிரபந்தத்தையும், திருமந்திர ஜபத்தையும் பொதுப் பொருள்களாக்கித் தந்தார்.

குல ஆசாரங்களில் அவரவர் முறைமைப்படி தனித்திருந்தாலும், வைணவ பக்தர்கள் (பாகவதர்கள்) என்ற நிலையில் யாவரும் கூடியிருந்தே பெருமாளுக்குப் பக்தி செலுத்தி வரவேண்டும் என்று விதித்திருந்தார் உடையவர்.

ஒரு சமயம், ராமானுஜர் திருத்தல யாத்திரை செய்து வரும்போது, தீண்டப் படாத இனத்தைச் சேர்ந்த ஒரு பெண்மணி எதிர்ப்பட்டாள். அவளை ஒதுங்கி இருக்குமாறு சில சீடர்கள் கூவினர்கள். அவள், "உலகம் அளந்த பெருமானின் உறைவிடத்தில் யார் எங்கே ஒதுங்கியிருக்க முடியும்? எங்கு ஒதுங்கினாலும், அது அவன் இடம்தானே?" என்று பதில் சொன்னாள்.

அந்த அம்மையின் ஞானத்தைக் கண்டு உளம் நெகிழ்ந்தார் ராமானுஜர்; அவளைக் கைகுவித்து வணங்கி, தம் சீடரின் பேச்சுக்காக மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்!

எதிராசர் தாழ்த்தப்பட்ட சாதியினரையும் திருத்திப் பண்புடையவராக்கி வைணவ சமயத்தில் சேர்த்துக் கொண்டார். தீண்டத்தகாத கீழ் இனத்தவரை (அரிசனங்களை) திருக்குலத்தார் என்று அழைக்கச் செய்தார். பகவானின் பக்தர்களுள் பிறப்பால் ஏற்படும் ஏற்றத் தாழ்வுகளைப் பெருமானின் முன்னிலையில் பாராட்டலாகாது என்று விதித்தார்.

திருவரங்கத்தில் கோயில் சேவையில் ஈடுபட்டிருந்த தும்பியூர் கொண்டி என்னும் இடைச்சாதிப் பெண்மணியையும், ஒரு சலவைத்தொழிலாளியையும் அரங்கநாதரின் சன்னிதானத்திற்குத் தாமே அழைத்

துச் சென்று, அவர்களுக்கு அருள் புரியுமாறு திருவரங்கப்பெருமானை வேண்டிக் கொண்டார்.

எதிராசரைத் தெய்வாம்சமாகப் போற்றிவந்த பக்தர்கள் நாடெங்கும் நிறைந்திருந்தார்கள். அவர்களுடைய வேண்டுகோளுக்கு இணங்கி, தமது திருவுருவத்தை விக்கிரகமாக வார்க்கச் செய்து அங்கங்கே அளித்துவிட்டு வந்தார். அவை மூலமாக உடையவர் இன்றும், திருநாராயணபுரம், திருவரங்கம், ஸ்ரீபெரும்பூதூர், திருப்பதி ஆகிய திருத்தலங்களில் கோவில் கொண்டுள்ளார். தாம் வளர்த்த அருள் சமயமான வைணவம் என்றும் தழைத்து நிலைக்க எம்பார், பராசரர், பராங்குசர், தேவராஜர், சுந்தரத் தோளர், சொட்டைநம்பி முதலான மகாமேதைகளான எழுபத்துநான்கு சீடர்களை, தம் பிரதிநிதிகளாக்கினர். அவர்களுக்கு 'சிம்மாசனுதிபதி' என்றும், 'பீடாதிபதி' என்றும் சிறப்புப் பெயர்கள் சூட்டி வைத்தார். அவர்கள் பாரதத்தின் பல பகுதிகளிலும் ஆசார்ய பீடங்களை அமைத்து வைணவத்தைப் பரப்பலானுர்கள்.

தமக்கு அந்திம காலம் நெருங்குவதை உணர்ந்த உடையவர் சீடர்களை அழைத்து, கடைசி உபதேசத்தை அருளினர் : "திருவுடன் கூடிய நாராயணனைப் புகலாகக் கொண்டு பணிபுரிந்து வந்தால், மனிதர்களுக்கு இவ்வுலக வாழ்விலும், மறுவாழ்விலும் நன்மையும் மேன்மையும் நிச்சயம் கிட்டும். பகவானின் பக்தர்களிடம் எவ்வித இடர்ப்பாடும் கொள்ளலாகாது ; அந்தப் பிழைதான் உய்வுக்குத் தடை. குருபக்திதான் எல்லா நலன்களுக்கும் துணை புரியும்."

கடைசியாக, "இந்த அடியவன் அறிந்தோ, அறியாமலோ ஏதாகிலும் பிழைகள் புரிந்திருந்தால், நீங்கள் மன்னித்தருள வேண்டும்" என்று உருக்கமாக மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்.

கூடியிருந்த சீடர்களின் நெஞ்சங்கள் தழுதழுத்து, வலியேறின. கண்கள் நீர் சொரிந்தன. அவர்கள் திராவிட வேதத்தின் பாசுரங்களை உரக்க இசைத்துக் கொண்டிருந்தார்கள். எம்பார் மடியிலே தலை வைத்து, வடுக நம்பியின் மடியிலே திருவடிகளை வைத்துச் சயனித்திருந்தார் எதிராசர். அவர் செவிகள் சீடர்கள் இசைக்கும் திவ்வியப் பிரபந்தப் பாக்களைக் கேட்டுக் கொண்டிருந்தன. மூடிய கண்கள் அரங்கநகர்ப் பெருமான், காஞ்சிநகர்ப் பேரருளாளன் ஆகிய அர்ச்சா மூர்த்திகளையே மாறி மாறித் தரிசித்துக்கொண் டிருந்தன. உள்ளமோ ஆளவந்தார், திருக்கச்சி நம்பிகள், பெரிய நம்பிகள், கோஷ்டி பூரணர் ஆகிய குருமார்களின் திருப்பாதங்களையே நினைந்து வணங்கிக் கொண்டிருந்தது. இதே பாவனமான நிலையில் எம்பெருமானுர் பரமபதம் எய்தினுர். அந்த மகானின் திருமேனியைத் திருவரங்கம் பெரிய கோயிலின் வசந்த மண்டபத்தில் வைணவ பக்தர்கள் திருப்பள்ளிப் படுத்தினுர்கள்.

அக்காலம் கி. பி. பன்னிரண்டாம் நூற்றுண்டின் நடுப் பகுதி.

அக்காலத்தில், ராமானுசரைத் தெய்வமென்றே சரணடைந்த உத்தம சீடர்களில் தலைசிறந்தவரான திருவரங்கத்தமுதனுர் எனும் வைணவப் புலவர், உள்ளம் ஒன்றிப் பாடிய ராமாநுச நூற்றந்தாதியை இன்றும்